# தமிழ் அகராதி




பதிப்பாசிரியர் : டாக்டர். எஸ். சௌந்தரபாண்டியன்
எம்.ஏ. (தமிழ்), எம்.ஏ. (ஆங்.), பி.எட்., டிப்.வ.மொ., பி.எச்.டி.,

பொதுப் பதிப்பாசிரியர் : நடன காசிநாதன், எம்.ஏ.,

அ.கீ.சு.நூ. சுவடிகள் வரிசை எண்: 77

# தமிழ் அகராதி


பதிப்பாசிரியர்:

டாக்டர் எஸ். சௌந்தரபாண்டியன்,

எம்.ஏ.(தமிழ்), எம்.ஏ.(ஆங்.), பி.எட்., டிப்.வ.மொ., பிஎச்.டி.,

காப்பாட்சியர், அ.கீ.சு. நூலகம்,

சேப்பாக்கம்,

சென்னை-5.

பொதுப்பதிப்பாசிரியர்:

நடன. காசிநாதன், எம்.ஏ.,

இயக்குநர்,

தொ.பொ.ஆ.துறை,

தரமணி, சென்னை-113



அ.கீ.சு.நூ.

1995

Govt. Oriental Manuscripts Series:77

# TAMIL AKARADI


Edited by:

**Dr. S. SOUNDARAPANDIAN,**
M.A.(Tamil), M.A.(Eng.), B.Ed., Dip. Skt., Ph D.
Curator
G.O.M.L.
Chepauk,
Madras-5



General Editor:

**Natana. Kasinathan,** M.A.,
Director,
Dept. of Archaeology
Tharamani,
Madras-113.



G.O.M.L.
1995

Price :Rs.50/-

# பொதுப்பதிப்பாசிரியர் முன்னுரை

அ.கீ.சு. நூலகத்தில் அச்சில் வெளிவராத நூல்கள் இன்னும் உள்ளன.

அச்சில் வெளிவராத நூற்களை ஆண்டுதோறும் இத்துறை வாயிலாக அச்சுக்குக்கொணர்ந்து வெளியிட்டு வருகிறோம்.

இவ்வாறு அண்மையில், தமிழக ஊர் வரலாறுகள், மடல் திரட்டு, கருப்பர் குளுவ நாடகம், நலங்கு மெட்டு இராமாயணம் முதலிய அரியநூற்கள் வெளிவந்தன.

தற்போது, ஓலைச்சுவடியிலிருந்து பதிப்பிக்கப்படும் தமிழ் அகராதி வெளியிடப்படுகிறது.

இத்தமிழகராதி தமிழ் இலக்கண இலக்கிய ஆராய்ச்சியாளர் களுக்குப் பெரிதும் பயனளிக்கும் என்று கூறலாம்.

தமிழக அரசு, தமிழ்ப்பண்பாட்டுத்துறை மூலமாக அ.கீ.சு. நூலக வெளியீடுகளுக்கு அளிக்கும் ஆக்கமும் ஊக்கமும் தொடர்ந்து ஓங்கி வருகின்றன.

இவ்வகையில், தமிழ்ப்பண்பாட்டுத் துறையின் முன்னாள் செயலர் திரு. சா.பா. இளங்கோவன், ஐ.ஏ.எஸ். அவர்களுக்கும், தற்போதைய செயலர் இரா. கிறித்துதாசுகாந்தி, ஐ.ஏ.எஸ். அவர்களுக்கும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூலினைச் சுவடியிலிருந்து பதிப்பித்துள்ளவர் டாக்டர் எஸ். சௌந்தரபாண்டியன், காப்பாட்சியர், அ.கீ.சு. நூலகம் ஆவார். அவருக்கு என் நன்றி.

இந்நூலினைத் தமிழுலகு ஏற்றுப் பயன்கொள்ளும் என்று நம்புகிறேன்.

நடன. காசிநாதன்

# பதிப்புரை

அ.கீ.சு. நூலகத்தில் ஆர். 805 என்ற எண்ணில் பாதுகாக்கப்பட்டு வரும் ஓலைச்சுவடியிலிருந்து இவ்வகராதி பதிப்பிக்கப்பட்டுள்ளது.

ஓலைச்சுவடியில் இவ்வகராதியை எழுதிய ஆசிரியர் பெயர் குறிக்கப்படவில்லை.

வைணவக் கருத்துகளுக்குக் குறிப்பிடத்தக்க இடம் தந்து எழுதியுள்ளதாலும், பிற குறிப்புகளாலும் இந்நூலாசிரியர் வைணவ அந்தணர் என்று மட்டும் தெரியவருகிறது.

நூலின் காலமும் ஓலைச்சுவடியில் குறிப்பிடப்படவில்லை.

ஓலையின் எழுத்தமைதி மற்றும் அகராதிப் பொருள்கள் ஆகியவற்றின் அடிப்படையில், இவ்வகராதியின் காலம் கி.பி.19ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்று கூறமுடிகிறது. வீரமாமுனிவர் காலத்துக்கும் முந்தையதாக இதைக் கூறச் சான்றுகள் இல்லை.

இவ்வகராதியில் கூறப்பட்டிருக்கும் பொருட்சிறப்புகள் பாராட்டத்தக்கன.

வழக்குச் சொற்களுக்கும், இலக்கிய வழக்குகளுக்கும் இடம் தந்து செல்கிறது இவ்வகராதி.

தமிழ்ச்சொற்களுக்கு வடமொழிப் பொருள் உரைத்துச் செல்வது இவ்வகராதியின் தனித்தன்மை. இவ்வகராதி மூலம், பல வடசொற்களுக்கு நாம் தமிழ்ப்பொருளை உணரமுடியும்.

வடமொழிச் சொற்களை எழுதும்போதும், தமிழ்ச்சொற்களை எழுதும்போதும், ஓலையில், கிரந்தஎழுத்து பயன்படுத்தப்பட்டுள்ளது என்பது அறியத்தக்கது. அக்கிரந்த எழுத்துகளெல்லாம், படிப்பார் எளிமைக்காக, தமிழ் எழுத்துகளாகப் பதிப்பாசிரியரால் மாற்றப்பட்டுள்ளன.

நிகண்டின் தாக்கத்தையும், 'ஆங்கில முறை' அகராதியின் தாக்கத்தையும் இவ்வகராதியில் காண்கிறோம். 'பண் – கோடு, அணியும்' என்று இறுதிச் சொல்லுடன் உம்மை புணர்ந்து எழுதியிருப்பது நிகண்டின் தாக்கமாகும்.

இடையிடையே பாடல் அடிகள் பயின்றிருப்பதும் இவ்வகராதியின் குறிப்பிடத்தக்க பண்பாகும்.

ஓரிரு இடங்களில் கதை கூறும் போக்கும் உள்ளது.

மருள்—மருட்சி என்பது போல, இருள்—இருட்சி என்பது போன்ற புதிய சொல்லாக்கத்தையும் இத்தமிழகராதியில் காண்கிறோம்.

பொருளை, அனைவரும் உணர்வது போல மிக எளிமையாகக் கூறியுள்ளது போற்றத்தக்கதே.

"உயிர்க்கொலை – பிராணன் மாத்திரம் இருக்கக் கொல்லுகை"
"உயர்ந்தோர் மாட்டு – ஞானிகள்"

போன்ற இடங்கள் சான்று.

குணாலக்கூத்து – தலைகீழாக ஆடும் கூத்து
கும்மாயம் – குழையச் சமைத்த பருப்பு

போன்ற பொருட்சிறப்புகள் இத்தமிழகராதியில் சிறப்பிடம் பெறுகின்றன.

தமிழ் ஓலைச்சுவடியில் உள்ள அகராதிகள் நன்கு ஆயப்பட வேண்டும்.

அகராதி என்பது மொழியின் வளத்திற்கு மட்டுமல்லாது, மொழியின் அக்கால வளர்ச்சிக்கும் ஓர் அளவுகருவியாகத் திகழ்வது.

அச்சிட்ட அகராதியைப் புரட்டுவது எளிமையாக இருந்தாலும், ஓலைகளில் பண்டு அவற்றைத் தொகுத்தது எவ்வளவு துன்பமான செயல் என்பதைத் தமிழ் உலகு உணரவேண்டும். தமிழ் அகராதி எனும் பெயரிய இந்த ஓலைச்சுவடியிலேயே, ஒரே சொல்லுக்குப் பல பொருள்கள் பல இடங்களில் எழுதப்பட்டிருந்தன. ஒரே அகர வரிசைக்குள், ஒரே இடத்தில் அவற்றை மீண்டும் பதிப்பாசிரியர் தொகுக்க வேண்டியதாயிற்று.

இலக்கியங்களைப் படிக்கும்போது, குறிப்பிட்ட சொல்லுக்கு என்ன பொருள் என்ற ஐயம் வருங்காலையில், அதற்குரிய பொருளை நல்கும் முறையில் இவ்வகராதி அமைந்துள்ளது.

ஓலையில், சொற்கள் அகர வரிசை மாறியே, அங்குமிங்குமாக எழுதப்பட்டிருந்தன. அவற்றையெல்லாம் முறைப்படுத்தி, அகரவரிசைப்படுத்திப் பதிப்பாசிரியரே செம்மை செய்ய வேண்டியதாயிற்று. ஓலையில், ஆசிரியர் தொகுக்கும்போது, அவ்வளவாக அகர வரிசையைப் பேண இயலாதுபோலும்.

பொதுவாக, இதற்கு முன்பு பல தமிழ் அகராதிகள் வெளியிடப்பட்டிருப்பினும், ஓலைச்சுவடியிலிருந்து நேரடியாகப் பதிப்புப் பெறும் இவ்வகராதி பல பெருமைகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது என்பதில் ஐயமே இல்லை!

– டாக்டர் எஸ். சௌந்தரபாண்டியன்,
எம்.ஏ.(தமிழ்), எம்.ஏ.(ஆங்.), பி.எட்., டிப்.வ.மொ., பிஎச்.டி.,
காப்பாட்சியர்,
அ.கி.சு. நூலகம்,
சென்னை–5.

# தமிழ் அகராதி

## அ

அஃ – கருதி
அஃகம் – தெப்பல்
அஃகாவே – தப்பாவே, தப்பியோடிப்போம்
அஃதே – அப்படியே
அஃறிணை – அசேதனம், அசேதனச்சொல்
அக்கப்பறை – அலைச்சல்
அக்கரவு – இரக்கம்
அக்கு – வெறுப்பு, எலும்பு, சங்கும்
அக்குமணிவடம் – சங்குமணிவடம்
அக்ராம்யம் – மறைபொருளாகச் சொல்லுகை
அகஞ்சுரிப்பட – குறைய, அல்பமாய்
அகடு – கீழ்வயிறு, முகமும்
அகண் – வயிறு
அகத்திடுகை – விடுகை
அகப்பு – எழுச்சி, ஞானமும், பிரயத்னமும்
அகம் – கிருகம், நெஞ்சம், அகமர்த்தம், பாபம், உள், விலக்ஷணதியானாதி, அவகாசரும்
அகம்படி – அந்தரங்கமாயிருந்து நியமிக்கிற பெயர்
அகம்படியார் – நிர்வாகரும், அந்தரங்கரும், அபிமானகரும்
அகம்படிவைத்தவரசு – அந்தரங்கண்யம், அந்தரங்கநியாப்யன்
அகரு – அகரி, அகில்
அகருகை – மேலிருகை
அகலம் – ஆகாசமும், மார்பும், வயிறும், விஸ்தாரமும், கல்பமும்.
அகலும் – நிலமும், இடமும், விரித்தலும், மார்பும்
அகவலை – அகவிய வலை
அகவாய் – மனது
அகவி – அதக்கி
அகவுதல் – அழைத்தல்
அகள் – தோல்
அகன் – இடம்
அகி – இரும்பும், பாம்பும்
அகிம்சித்கரம் – அப்ரயோஜகம்
அகிழ்ந்து போடுகை – களைந்துபோடுகை
அடுகை – புறப்படவிடுகை, ஆடுகையும்
அகுசரம் – கொலையம்பு
அங்கண்ணன் – அதிப்ரவணன், கோழை நெஞ்சையுடையவன், சபலன்
அங்கம் – வடிவு, அடையாளமும்
அங்காடிபாரிக்கை – பருத்தி போடுகிற பக்கு முன்னே புடவைக்குப் பணம் வாங்குகை.
அங்காந்துகை – வாயைத் திறக்கை
அங்காழி – மெல்லிய மொழி
அங்கி – நெருப்பு, சட்டையும்
அங்கோலம் – அழிஞ்சில்
அச்சில்லாக்காசு – முத்திரையில்லாக்காசு
அச்சோ – ஆச்சரியம்
அசங்கதம் – பொய்
அசம் – அந்நியம்
அசலிட்டு – வேறுபண்ணி
அசற்பிளந்தேறுகை – மரத்தைத் துளைத்துத் தெரியாதபடி ஏறிடுகை
அசிற்பு – பாதபூரணம், சந்தேகமும்.
அசீர்க்கை – சந்தேகிக்கை
அசுக்காட்டுகை – அனுசரிக்கை, அனுவதிக்கை
அசுணம் – நாய்
அசுணமா – பட்சி விசேஷம்

அசூயை – குணேசுதோ ஷாரோபணம்,
அக்னிநாசிஞ்சத் போலே
அசங்கதம் என்றபடி

அசை – நேரசை, நிரையசை என்று
வெண்பாவிற்குலக்ஷணங்கள்;
அவ்யயார்த்தம், வருத்தம்,
அசைகையும்

அசைகை – நகையாலே விடமாட்டாதேயும்
பிரவர்த்திக்க மாட்டாதேயும்
இருத்தல்

அசைந்திடுகை – இளைக்கை

அசையற – பயமில்லாதே

அசையிடுகை – அனுபவித்துக்
கொண்டிருக்கை

அசையுளின்பம் – அவ்யயம்

அசைவு – இளைப்பு, கலிக்கை, விச்சேதம்,
ராமரும், சங்கோஜம், க்ஷயமும்.

அஞ்சலி – பேதையும் ஆவலும்

அஞ்சன் – காயா

அட்ட சோறு – சமைத்த சோறு

அட்டது – ஜலமிச்ரமாகப் பசிக்கை,
தீர்த்ததானமும்

அட்டாலை – மேல்தளம்

அட – ஸ்வபலப்ரகாரோக்தி

அடக்கட்டு – அண்டிப்பிடிக்கை

அடகுவளம் – அடுக்குச்சட்டி

அடங்கார் – சத்ருக்கள்

அடம் – பொல்லாங்கு

அடம்பு – கொன்றை, கடப்பம் பூவும்

அடர் – நெருக்க மேலிடுகை

அடல் – மிடுக்கும், வெண் பொலிவும்,
அடலையும்

அடற்கை – மேலிருகை

அடி – சுவாமி பாதமும், தனமும், மூலமும்,
மர்த்தாதையும்

அடிக்கழஞ்சு – ஓரடிக்கழஞ்சுப்பொன்

அடிக்கழிவு – தப்பு

அடிகொதித்தால் – அடிசுட்டால்

அடிச்சுதாசீ – வெள்ளாட்டீ

அடிச்சுவடு – அடிகள் பட்ட அடையாளம்

அடித்தூண் – அடிமரம், இலக்கைக்
குறிப்பித்துவிட்ட விசீமை

அடிதாறு – ரேகை, பாதரேகை,
பாதுகையும்

அடிப்பட்ட – சாராம்சமான

அடிப்பாடு – அபகதி

அடிபற்றின – ஸ்லாஹியமான

அடிமலர் – அடித்தாமரைப்பூ

அடியறிவார் – உற்பத்தி மூலமறிவார்

அடியார் – கைங்கர்ய நிஷ்டர்

அடியுடைமை – பிரபாவம், மூலதனமும்

அடியுடையார் – திருவடிகளும், தனமும்
உடையார்

அடியொத்துகை – அனுசரிக்கை

அடிவீட்சி – தாசி

அடுகுவளம் – போகனம்

அடுகை – கொல்லுகை, முடிக்கை,
பாதிக்கை

அடுத்தேறு – அநீதி

அடை – இலை, ஓலை, கனம்

அடைகட்ட – பட்டம் கட்ட, அள்ளுகட்ட

அடைகு – அடுக்குச்சட்டி

அடைகுவளம் – அடையவளஞ்சான்சிறப்பு

அடைந்தேற்றல் – மேட்டுமடை,
ஆகந்துகமும்

அடைப்புண்ணும் – அந்தர்பூதம்

அடைபுடை – அகோரத்ரம்

அடைமதிட்படுத்தி – அடைச்சுமுத்திகை

அடையார் – சத்ருக்கள்

அடைவு – சம்பந்தம்

அடைவுசொல் – பிராசம்

அண்டம் – முட்டை, ஆகாசம்,
புழுகுச்சட்டம், பூமி, ப்ரமபதம்

அண்டர் – தேவரும் இடையரும்
அண்ணல் – குறிஞ்சி நிலத்தலைவன், ஸ்வாமி
அண்ணிமை – கிட்டினமை
அண்ணாதல் – மேற்பார்வை
அணங்கன் – விருப்பம், அழகு
அணங்கு – விருப்பம், அழகு, சத்ருசம், நோவு படுகை, தெய்வப்பெண்
அணர் – ஸ்மஸ்ருப் பிரதேசம்
அணவல் – அணுகல், புல்
அணாவாய்த்து – அணாவாயடித்து
அணாவார்த்து – பிரீதியாலே விடவும் மாட்டாதே புசிக்கவும் மாட்டாதே சாபலத்தைப் பண்ணுகை
அணி – தண்டுப்பார், அணியப்படுக்கை, நெருங்கப்படுக்கை, அணிவகுப்பு, பந்தியாக வகிருகை, அழகு, ஆபரணம், மணி
அணிகலங்க – ஒலக்கங்கலைய
அணிகலன் – ஆபரணம்
அணிகுலைய – ஒலக்கல் குலைய
அணுக்கடித்து – அந்தரங்கத்தே பாவித்து
அணுக்கன் – கொடை, அந்தரங்கன், சித்திரம்
அணுக – கிட்ட
அணுங்குகை – நோவுபடுகை
அணை – மெத்தை, கரையும்
அத்தம் – மறைபொருள்
அத்தா – சுவாமி, ஸேஷி
அத்தாணி – அருகிருப்பு, அந்தரம், அண்ணிமை கொள்ளுகை
அத்திரம் – அஸ்திரம்
அத்திரி – ஒட்டகம், கழுதை, விண், கணை, வரை, பரி
அத்து – அசை, சாரியை, அவ்யயம், சிலம்பு, அரைஞாண், ஓசை
அத்தைப்பற்ற – அத்தைக் காட்டிலும்
அதகன் – மிடுக்கன்
அதர் – வழி, மார்க்கம், புழுதி
அதனிலும்பர் – அதற்கு மேலே
அதிசேஷம் – ஆவது முன்னே சொன்ன வார்த்தத்தைத் தானே மற்றவிடத்துச் சொல்லுகை
அதிர்ந்திருக்கை – பொறாமை, தரணிக்கரம்
அதிஷ்டிகை – பீடிகை
அந்தகன் – குருடன், யமன்
அந்தகன் தண்ணீரென்றபடி – இஷ்டையான ஸ்திரீ இருந்தவிடத்திலே தீர்த்தம் வேண்டுமென்ற கிலாஜத்தையிட்டுப் புகுமாப்போலே
அந்தம் – துக்கம், முடிவில்லாதது, ஆகாசம், பொன்
அந்தரப்பட்டு – அனர்த்தப்பட்டு
அந்தரம் – ஆகாசம், அபாயம், இடைவெளி, நடு, துக்கம், விச்சேதம், த்வீபம்
அந்தரி – பார்வதி
அந்தித்தல் – பொருந்தல்
அந்தோ – துக்கம்
அந்தோட்டை – அதற்குச் சத்ருசம்
அப்படை – அந்தரங்கன்
அப்பர் – பிரகிருதி
அப்பன் – உபகாரகன்
அப்புத் தட்டுகை – தோளிலே கையைத் தட்டுகை
அப்யஹீதன் – அந்தரங்கன்
அபதானம் – விருத்த கர்மங்கள்
அபயதாபம் – மறைக்கை

அபலாபம் – மறைக்கை
அபவரகம் – அணங்கு
அபக்ஷதர்மம் – பிரகீர்ணவிருத்தம்
அபஹ்னவி – மறைக்கை
அபாஸ்ரயம் – ஆஸ்ரயம்
அபிசந்தி – அபிப்பிராயம்
அம் – அழகு
அம்பரம் – கடல், புடைவை, ஆகாசம்
அம்பலம் – தர்மச்சாவடி, வெறுப்பு, நிந்தை, க்ஷேபம்
அம்பு – கணை, நீர், பாணம், புயல்
அம்புயம் – தாமரை, புட்டில், பொதி
அம்போதி – காலும் கடலும்
அம்ம – ஆச்சரியம், ஸ்வபலம்
அம்மணத்தி – துர்க்கை
அம்மணி – அரை, மடி
அம்மனாயினார் – தாயும் தகப்பனும்
அம்மா – சுவாமி, ஸ்வபலம், பிரபல பிரகாரோத்தி
அம்மாள் – பூர்ணன், சர்வேஸ்வரனும்
அம்மான் பொடி – மாயப் பொடி
அம்மி – ஜலம்
அம்மை – நயினார், சுவாமி
அம்மைச்சுவடு – கர்ப்பவாசம், கருங்கோட்டியுட்கிடந்து
அமணன் – அம்மணவன், கூத்து, லஜ்ஜையின்றியே நிர்வாணமாகக் கூத்தாடுகை,
அக்ரமம்அமணன் தலையோடே – அதாவது, ஒரு கள்ளன், ஒரு பிராமணன் கிருகத்திலே கன்னமிடவதீரச் சுவராகையாலே யதிர்த்துக் கொண்டு அவன் மரிக்க, அவ்வளவிலே அவன் பந்துக்கள் வந்து பிராமணனைப் பழிதர வேண்டுமென இரண்டு திறரும் ராஜாவின்பாடே புக, அந்த ராஜாவும் அவிவேகியுமாய் மூர்க்கனுமாகையாலே, "பிராமணா நீ ஈரச்சுவர் வைக்கையினாலே யன்றோ யவன் மரித்தான்? ஆகையாலே நீ பழி கொடுக்கவேண்டுமெ"ன்ன, அவன், "எனக்குத் தெரியாது. சுவர் வைத்தகூலியாளைக் கேட்க வேண்டுமெ"ன்ன, அவனை யழைத்து, "நீயன்றோஈரச்சுவர் வைத்தாய்? நீ பழி கொடுக்க வேண்டுமெ"ன்ன, அவனும், "தண்ணீர் விடுகிறவன் போர விட்டான்; நான் செய்யலாவ தென்னெ"ன்ன, அவனையழைத்துக் கேட்க, அவனும் "(குயவன்), பெரும்பானை தந்தான்; அதனாலே நீரேறித்தெ"ன்ன, அவனை யழைத்துக்கேட்க, அவனும் "என்னால் அன்று, வேஸ்யை போகவரத் திரிந்தாள்; அவளைப் பார்க்கிற பராக்கிலே பானை பருத்தது" என்ன, அவளை யழைத்துக் கேட்க, அவளும் "என்னாலன்று, வண்ணான் புடைவை தராமையாலே போக வரத் திரிந்தேன்" என்ன, அவனை யழைத்துக் கேட்க, அவனும், "என்னாலன்று, துறையிலேகல்லிலே ஒரு அமணன் வந்திருந்தான்; அவனைப் போகவிட்டுத் தப்ப வேண்டித்தெ"ன்ன, அந்த அமணனையும், "என் செய்தாய்? நீ பழிகொடுக்க வேண்டுமெ"ன்ன, அவன், மௌனி யாகையாலே பேசாதேயிருக்க உண்மைக்குத் தரமில்லையென்று இருக்கிறான்; இவனே எல்லாம் செய்தானென்று ராஜா, அவன் தலையையரிந்தான்!

அமணானை – தனித்த ஆனை
அமயம் – பொழுது
அமர் – யுத்தம்
அமர – கிட்டி
அமரர் – முனிவர், கைங்கர்ய நிஷ்டர், குண நிஷ்டர்
அமலை – ஊமையும் சோறும்
அமளி – ஆரவாரம், கலகம்
அமறல் – மிகுதி, பொலிவு, பெருமை, பொன்
அமா – ஆனைக்கடன்
அமுதம் – பிராப்யம்
அமுது – அமிர்தம்
அமை – மூங்கில்
அமைக்கும் – தெவிட்டும்
அமைகை – சமைக்கை
அமைத்தல் – சமைத்தல், பக்குவம்
அய்யநா – மெல்லிய நாக்கு
அய்யம் – பிச்சை, சம்சயம்
அய்யர் – அழகு, சூட்சுமம்
அய்யல் – ஸ்லேஸ்மம்
அய்யன் – பரம பந்து
அய்யார் – ஸ்லேஸ்மம்
அய்யுறவு – சம்சயம், குறை
அயநின்ற – அசையாதே நின்ற
அயம் – உமி, நீர், ஜலம்
அயர்வு – மறப்பு, சம்சயம், அறிவு கலங்குகை
அயர்வெய்தல் – அறிவு கெடுதல்
அயல் – அசல், கூர்மை
அயன் – பிரம்மா, அஜன்
அயனம் – வழி, ஆண்டில் பாதி
அயாவு – மோகம்
அயில் – வேலும் கூர்மையும் வாளும்
அர்ஜுனன் – அர்ஜுனன், வெண்மை

அரக்காம்பல – செவ்வாம்பல்
அரங்க – பின்னமாக, அழிக்கையும்
அரசாணி – அஸ்வர்த்த தண்டம்
அரட்டம் – தீம்பு, மிடுக்கும்
அரட்டன் – தீம்பன், மிடுக்கனும்
அரந்தை – துக்கம்
அரம்பன் – தீம்பன்
அரம்பையர் – தேவஸ்திரீகள்
அரவன் – யமன், ரவி, புத்திரன்
அரவு – துக்கம்
அராவுகை – லகுகரிக்கை
அரி – சிம்மம், மான், வண்டு
அரிகுரல் – தழுதழுத்தல்
அரிட்டன் – அசுரன்
அரிமா – குதிரை
அரிமிதி – சாரம்
அருகுலை – இடிசல் கரை
அருங்குலை – இடிக்கரை, அருங்குபோலே சூக்ஷ்மமான கரை
அருந்துகை – உண்கை, பானம் செய்கை
அருள்கொடை – பக்தியோடே கொடுக்கை
அரைத்துடர் – அரைஞாண் மாலை
அரையாறு – குறைத்தல்
அல் – எயில், இருள், சப்தம்
அல்குல் – நிதம்பம், கௌபீனம்
அல்லல் ஆரவாரம், அலமாப்பு, மனோதுக்கம், கிலேசம்
அல்லி – பூவிதழ்
அல்லு – ராத்திரி
அல்வழக்கு – நியாயம்
அலக்கம் – துக்கம்
அலக்கு – கொட்டை, அதிசயம்
அலக்குப்போர் – அன்யோன்யா தாரமான வீட்டிப்போர்

அலகு – ஈட்டி, பேய், நெல்லுக்கதிர்
அலகுதல் – சலனம்
அலாதல் – ஆயசம்
அலங்கல் – எள், அசைவு, இலங்கல், தளிர், பூமாலை, தங்கல், சுருங்கல், ராத்திரி, பாரவஸ்யம்
அலந்தலை – அலமாக்கை, அனன்விதபாஷணம்
அலப்பு – சொல்லுகை
அலம் – கலப்பை, கூர்மை, மது, அழகு, அமைவு, ஹலம்
அலம்ப – அலைய
அலம்பல் – சலிப்பித்தல், அலைகிற
அலமருக்கை – அலைக்கை, தள்ளுகை
அலமறுகை – தடமாறுகை
அலமாப்பு – அலமருகை, தடமாறுகை
அலயம் – உமிநீர்
அலர் – பழி, புஷ்பம்
அலருகை – பரம்புகை
அலரெடுத்த வண்ணத்தான் – இந்திரன்
அலரெழிலாயிருர் நிற்கும் – பழி சொல்லிலுயிர் நிற்கும்
அலவலை – பகு ஜல்பம்
அலவன் – நண்டு, நிலா, யானை, ஆண்நண்டு
அலறும் – கூப்பிடும்
அலி – சோறு, நமன், நறுவலி, நெருப்பு
அலை – சமுத்திரம்
அலைகொடுக்க – வியாபாரங்கொடுக்க
அலைசு – துக்கம்
அலைத்தல் – நின்றவிடத்தே சலித்தல்
அலைப்பணிமாறுகை – படுக்கள் கூப்பிடுகை
அலைபண்டி – சமுத்திரம், அலை, அழிந்த நீர்மை
அலையெறி – வீசுகை
அவருகு – அப்பால்
அவதானம் – சாவதானம்
அவம் – வியர்த்தம், பிரமாதிகமாகப் பண்ணின பாவம்
அவருகு – அப்பால்
அவலம் – நிஷ்சேஷடையாயிருக்கை, தேகபீடை, வடிவைப் பேணாமை, அவத்யம், கிலேசம்
அவலை – சப்தம்
அவறு – சாரிகைச் சொல்லு
அவனி – பூமி
அவனியாளி – பூமிபதி
அவா – ஆசை, பக்தி, அபிநிவேசம்
அவிடி – வினோதோத்தி
அவிவு – விச்சேதம்
அவீர் – மோர்
அவை – சபை, தாயார்
அழ – பேய், பிணம்
அழகுசெண்டு – விளையாடுகை, விளையாட்டுக் காரிகை
அழகுசெண்டேறுகை – சாரிவிடுகை
அழகே – அழகு, கண்டசர்க்கரை
அழல் – நெருப்பு, தேஜஸ், செளர்யம்
அழிகை – ஈடுபடுகை
அழிசுகாடு – தொண்டமான் காடு, மருபூமி
அழிவு – தப்புதல், மரியாதை
அழிவுக்கிட்டவடிவு – தன் மேன்மை கொள்ளுகையை விட்டு நீர்மை வேஷத்தைக் கொள்ளுகை, துவேசம், இழிவுக்கு இட்டவடிவு
அழுகை – பக்தி
அழுங்கிய – கூப்பிட்ட, அழுந்துகையும்
அழுப்புகம் – சுவர்க்கம்
அழுவம் – நடுக்கம், பரப்பு, துருக்கம், முரசம்
அழைக்கை – சொல்லுகை, அழைக்கையும்

அள்ளல் – அடிபொறாத சேறு, செறிவு, நிரயம்
அள்ளி – இதழ், தாது
அளகைக்கோன் – குபேரன்
அளப்பு – அளக்கையாய் உபமானரஷித என்றபடி
அளம் – பேறு
அளவிறந்த – அபரிச்சேத்யமான
அளவுடையார் – ஞானிகள், ஆச்சரியபூதர்
அளாய் – சுற்றி, அளாவி
அளி – குறத்தி, வண்டு, அன்பு, கொடை
அளிக்கை – கொடுத்தலும், ரக்ஷித்தலும்
அளிய மாந்தர் – அருமந்த மனிதர்
அளை – வெண்ணெய், முழஞ்சி, மத்தினாலுடைக்கப்படும் தயிர், வளை , பாழி, மூழை, வங்கு
அற்றம் – விச்சேதம்
அற்றன் – பிதா, ஜீவன்
அற்புதம் – அத்புதம்
அறச்சாலை – தர்மசாலை, தண்ணீர்ப்பந்தல்
அறத்தலை – ஜலம் மாறாத பிராதசம்
அறத்தோடு – தர்மத்தோடு
அறம் – தர்மம், அறுதி, நிச்சயம், கொடுக்கை
அறவச்சிறை – திக்கில்லாச் சிறை
அறவனை – தார்மிகனை
அறவிட்டு – வித்து
அறவிலை – சுள்ளுமுறியாக விற்கை
அறவை – திக்கில்லாதது
அறவைச் சிறை – கதியில்லாச் சிறை
அறாட்டுப் பறாட்டு – பொறாமை
அறிக்கை – பற்றிவித்தல், அறிவு
அறிதேய வசனம் – அர்த்தவசனம்
அறிவு – ஞானம்
அறு – இல்லாமை
அறுகம் – ஆனை, சிங்கம், யாளி, புலி
அறுகாதப்பயணம் – காதமற்றிருக்கிற பயணம்
அறுகாழி – மெல்லிய மோதிரம்
அறுகாறி – பவித்திரம்
அறுகை – அரிக்கை, இல்லாமற்போகை
அறுதல் – குறைக்கை, கேடு
அறுதொழிலோர் – அந்தணர்
அனுமானி – சூச்சும ஐந்து
அறை – பாறை
அறைகூறுகை – யுத்தாஹ்வானம், ஜயத்வனி
அறைகை – சப்திக்கை
அன்வர்த்தத்தேர் – ராஜா தரித்திரனானால் திரவ்யார்த்தமாகத் தேர்களிலேறித்தானே நடத்துகை
அன்வர்த்தம் – பிரயோஜனார்த்தம்
அன்றாடு – அன்றைக்கன்றாடு
அன்றாமை – காத்து
அன்றுகை – சீறுகை
அன்னம் – பூமி, சோறு
அன்னியம் – குயில்
அன்னே – அம்மே
அன்னை – தாயும் தோழியும்
அன்னைமார் – தாய்மார்
அன்னமார் – தமையன்மார்
அனங்கம் – மல்லிகையும், இருவாட்சியும்
அனத்து – அப்படிப்பட்ட
அனல் – அக்னி
அனாவலன் – சுக்கிரன்
அனிச்சம் – அனிச்சப்பூ
அனித்தம் – புஷ்ப விசேஷம்
அனிந்தல் – உண்டல்
அனுக்குரோசம் – கிருபை

அனுசயிக்கை – அனுதவிக்கை
அனுபக்தி – அஸ்சுவாரஸ்யம்
அனுவிதானம் – அனுசரிக்கை
அஷ்டி – போஜனம்
அஹமர்த்தம் – ஆத்யா

## ஆ

ஆக்கம் – சம்பத்து
ஆகம் – ஆகாசம், சரீரம், நெஞ்சு, உள், சந்தோசம், விருத்தி
ஆக்வம் – புத்தன்
ஆகாயே – ஆகவேண்டும்
ஆகாரம் – வடிவு, ஊண்
ஆகுலம் – பூசல், வருத்தம், வேதத்தில் அபப்பிரம்சம்
ஆகுவே – பெருச்சாளி, எலி
ஆகுளி – வாச்சி
ஆங்காரம் – அபிமானம், செருக்கு
ஆங்கு – ஆங்கே
ஆச்சி – இடைச்சி
ஆசி – வழுத்துதல்
ஆசிகம் – ஆஸ்யம், முகம்
ஆசினி – ஆகாசம், வயிரம், மரவுரி
ஆசீவகர் – அமணர்
ஆசு – சடுதி, கவசம், குற்றம்
ஆசுலம் – பூசல், இடுப்பு
ஆசை – திக்கு, வரிவு, கதி, சிந்தை
ஆட்டத்துவெளி – வையாளி வெளி
ஆட்டம் – சம்சாரம்
ஆட்டுகை – அலைக்கை
ஆடல் – வெற்றி, வார்த்தை
ஆடல்கொடுக்கை – இடங்கொடுக்கை, சலியாதேஇருக்கை
ஆடலவர் – நாயகாள்
ஆடவர் – இளையோர், புருடர், ஆண்பிள்ளை
ஆடி – காத்து, கண்ணாடி, பெண்பிள்ளை
ஆடு – ஆடு, வெற்றி, கூத்து, கூர்மை
ஆடுகை – சஞ்சரிக்கை, ஆசை, அவகாஹிக்கை
ஆடுபெருமை – உண்டிகை, வெற்றி, பரிமளம், அசைக்கை
ஆண்டு – வருஷம், புல், நெல்
ஆண்பிள்ளைச் சோரவி – ஸ்திரீ ரூபமான புருஷன்
ஆணம் – ஆண்பிள்ளைத்தனம், லஜ்ஜை, அரணம், ரக்ஷகம்
ஆணிப்பொன் – உரையாணி
ஆணுடைமை – ஆண்பிள்ளைத்தனம்
ஆத்தநம்பி – ஆபத்தன்
ஆத்மக்காமர் – ஸ்வார்த்தபரர்
ஆதர் – அறிவுக்கேடர், குருடர்
ஆதல் – துணுக்கம், தெரிதல்
ஆதி – மனோவியாதி
ஆதிரன் – பெரியோன்
ஆதுகொலே – அதுவோ, அதுவன்றோ
ஆதும் – என்றும்
ஆதேசம் – துரகரத்தைத் தள்ளிப் போகட்டு அதின்மேலே வருகிற அக்ஷரம்
ஆதோ – ஆச்சர்யே
ஆந்தராளகர் – ஆச்சாரியர்
ஆந்தராளகன் – சம்சாரிகள்
ஆப்புண்ட மிருகம் – அகப்பட்ட மிருகம்
ஆபத்தே செப்பேடாக – செப்பேடு (தாமிர சாசனம்) பிராயசுமாக என்றபடி
ஆபாத வ்ரதீதி – மேலெழத் தோன்றுகை

ஆம்பரம் – மாமரம், புளியும்
ஆம்பல் – மூங்கில், நிலவு, கள்,
ஆய்க்குழல், இலைக்குழல்,
ஆம்பல்
ஆம்பலம் – புளி
ஆமா – தாய்
ஆமிரம் – ஆம்ரம், மாமரம் என்றபடி
ஆய்தல் – தெரிதல், பழிப்பறுதலும்
ஆய்மலர் – தாமரை
ஆய்வர் – வித்வான்கள்
ஆர் – ஆத்தி, கூர்மை, பாகு, அணுக்கம்,
மிகுதி, படிகை, இடமுடைமை,
பூர்ணம், பருகுதல், எத்தல்,
ஆதித்யன், வேல்
ஆர்க்கும் – கதறும்
ஆர்க்கை – ஆவரிக்கை, சந்திக்கை
ஆர்கலி – மழை, கடல்
ஆர்த்து – சந்தித்து
ஆர்த்துக்கொள்ள – சங்கிரமிக்க
ஆர்தல் – படிதல், நிறைதல், குடித்தல்,
உண்டல்
ஆர்ப்பாவம் – தொனி
ஆர்ப்பு – தூளி, தோஷம்
ஆர்வம் – விருப்பம், வில்
ஆரணமறுத்தல் – பிரதிக்ஞையைத்
தப்புகை
ஆரம் – முத்துப்பதக்கம், மாலை, ஆத்தி,
சந்தனம், பித்தளை
ஆரலங்கல் – பாரவஸ்யம்
ஆரலம் – பகை
ஆரானாய் – அதிருப்தனாய்
ஆரியச்சிதைவு – ஆரியபாஷா அபப்ரம்சம்
ஆருபதம் – பித்தளை
ஆருவம் – நீர்
ஆரோதம் – நிவ்ருத்தி விரதம்
ஆல் – இடம், ஆலை, மரம், மேல், கீழ், ஜலம்

ஆலகண்டன் – ருத்ரன்
ஆலம் – ஆலமரம், மழை, நீர்
ஆலம்பம் – பற்று
ஆலம்பனம் – அவலம்பனம்,
ஊன்றுகோல்
ஆலவாயுடையான் – ஒரு தமிழனுக்குப்
பெயர் (மதுரை சோமசுந்தரர்
பெயர்)
ஆலி – ஆலம்கட்டி, தூளி, காற்று, நீர்
ஆவணவோலை – அடிமை முறி
ஆவரி – அம்பு
ஆவல் – ஆசை, வளை
ஆவலம் – புடைவை
ஆவா – அய்யோ வய்யோ!
ஆவி – உயிர், நாற்றம், புகை, மூச்சு,
வாவி, நஞ்சு
ஆவிக்கை – கொட்டாவி கொள்ளுகை,
அக்ராணம், பண்ணுகை,
பெருமூச்செறிகை
ஆவித்தல் – கொட்டாவி (விடுதல்)
ஆவுகம் – வாணாள்
ஆழ்வார் – பிள்ளைதேவப்
பெருமாளரயருடைய
திருத்தோப்பனார்
ஆழ்வாராகிரர் – ஆழ்வாரென்றபடி
ஆழல் – கறையான்
ஆழி – சமுத்திரம், திருவாழி,
வட்டணிப்பு, ஆழம்,
இடமுடைமை, கிருத்துமம்,
மோதிரம், ஆனையின்
கை நுனி, மிகுதி, காம்பீர்யம்
ஆழியார் – ஆழ்ந்தவர்கள்,
அவகாஹித்தவர்கள்
ஆள் – ஆண்மை
ஆளத்தி – ஆலாபம்
ஆளி – சிங்கம், கேடு, மூலம்

ஆளிட்டந்தி தொழுகை – சந்தியா வந்தனத்தை பொருத்தரைக் கொண்டு பண்ணிவிக்கை

ஆற்ற – பொறுக்கப் பொறுக்க

ஆற்றலான் – பெரியோன்

ஆற்றாமை – பொறாமை

ஆறு – பொருத்தல், சிரித்தல், தூளி, ஓசை

ஆன் – சிம்மம், பசு

ஆனகம் – கற்பகம், படகம், துந்துபி

ஆனம் – ரக்ஷகம்

ஆனவட்டம் – ஆனபடி

ஆனறுகை – பூர்ணமாடுகை

ஆனியம் – நாளும் பொழுதும்

ஆனை – தடை

ஆனைக்காலிட்டழிக்கை – பலாத்காரம் பண்ணுகை

ஆனைக்குக் குதிரை வைக்க – ஆனை முன்னே குதிரையை ஓடவிட

ஆனைக்குப்பு – சதுரங்கம்

ஆனைக்கூட்டத்துக் கதவிட – மைதுனா வணம்

ஆனைத்தாள் – பனைகழி, பிரகாசம், ஆனைக்கை

ஆனைத்தொழில் – பெரிய சுவாதந்தர்ய கிருத்யம்

## இ

இகல் – யுத்தம், மாசஜீவிதம், சத்ரு, கிலேசம், மடி, சாத்ருவம்

இகழ் – ஒழியாமே

இகழ்கை – த்யஜிக்கை

இகழுகை – விடுகை, அநாதரிக்கை, தூஷிக்கை

இருத்தல் – வீழ்த்தல், மீதல், செருத்தல், இழைத்தல்

இருளை – தோழி, நட்பு

இங்஡னே விடியக் கண்டோம் – இந்தப் பிரகாரமாக விளிக்கக் கண்டோம்

இச்சந்தானச் சாபம் – மந்திரிகள் ராஜபுத்திரர்களை வைத்துக் கொண்டு, சத்ருக்களை அழியச் செய்து, அவர்களை ராஜா ஸ்தானத்தில் வைப்பார்கள். அதைச் சந்தானச் சாபம் என்கிறது.

இச்சை – ஆசை, இழத்தல், ஞானம், பொய்த்தல்

இசங்குகை – நடக்கை

இஞ்சி – மதிள்

இட்டளம் – துக்கம்

இட்டறை – ஆனைப்படுகுழி, எதிர்ப்பை இடுகை, சங்கோசம்

இட்டி – இருப்பிடம்

இட்டிகை – செங்கல், இஷ்டிகை

இட்டிடை – சூச்சுமம்

இட்டிறை – இறையிடுகை

இட்டீடு – பிறரை அடித்துத் தனம் பிடுங்கை, விவாதம், உத்தரப் பிரத்யுத்தரம்

இட்டு – நேரியது, நீட்டுகை, தூதர் வாயிலே வரவிடுக்கை

இட்டுப் பிடிக்க – ஒருவனுக்குத் தானம் பண்ணிப் பிறக்கை

இடம்பாடு – அளவுடைமை

இடர் – துக்கம், வருத்தம்

இடவகை – வாசஸ்தானம்

இடவன் – கட்டி

இடவை – வழி

இடுசிவப்பு – செம்பஞ்சால் வந்த சிவப்பு, சாயமேற்றினது

இடுசுவைப்பு – ஆரோபித ரசம்
இடும்பை – துக்கம், தரித்திரம், அகங்கார மமகாரம்
இடை – நெருங்குதல், நடுவு, நிறை, அவகாசம், சம்பந்தம்
இடைச்செறி கடைச்செறி – விரலில் மோதிரமிட்டால் முன்னையும் பின்னையும் இடும் மோதிரம்
இடையாட்டம் – வியாபாரம், பாதிப்பு
இடையில்லை – இடையிடையாட்டமாய் அவகாசமில்லையென்றபடி
இடையீடு – உத்தரம், பொறுத்திருக்கை, விளம்பம்
இடையூறு – ஆபத்து, கிலேசம்
இடையெடுக்கை – கர்மானுகுணம்
இடைவீடின்றி – இடைவிடாதே
இண்டர் – அன்பாளர்
இண்டல் – நெருக்கல்
இண்டினவிடம் – நெருக்கம்
இண்டை – மாலை, செறிவு, தண்ணிமை
இணக்கி – இணங்கப் பண்ணி
இணங்கு – சத்ருசம்
இணர் – தளிர், கொழுந்து, பூ, பூங்கொத்து
இணருகை – விகசிக்கை
இணை – சேர்தல், ஒப்பு
இதணம் – பரண்
இதயம் – ஹிருதயம், தாத்வர்த்தம்
இதலை – கொடி
இதழ் – ஏடு, உதடு, பூவினிதழ்
இதழி – கொன்றை
இந்து – காடி, கரி, சந்திரன்
இப்பர் – செட்டிகள்
இம்மி – பொன்மை, நுண்மை
இம்மை – இந்த ஜன்மம், இந்த லோகம்
இமடி – யானை
இமம் – பனி, ஹிமம்
இமில் – குண்டிக் குத்து
இமை – கண்ணிமை, மயில், விசாரிக்கை, க்ஷண காலம்
இமைக்கை – புத்திபண்ணுகை, பிரகாசிக்கை, விழிக்கை
இய்யம் – வாழை
இயக்கம் – சஞ்சாரம்
இயக்குமறு – ஜனசஞ்சார சூன்யதை
இயக்கர் – யக்ஷர்
இயக்கல் – நடையாட்டம்
இயக்கு – துக்கம்
இயக்கை – செய்தி, சுபாவம்
இயங்க – சம்சரிக்க, இசங்க, மயங்க, கலங்க
இயத்தி – ஆதிக்யம், சாமர்த்தியம், யோக்யதை, சுபாவம்
இயர்தல் – எறிதல்
இயல் – மதிள், சுபாவம், இனிமை, அயல், நடை, தமிழ்
இயல்வு – விரகு, அழகு, விரதம்
இயலுகை – நிர்வகிக்கை, சொல்லுகை, வந்திக்கை, பலிக்கை
இயலும் – நிறைவேறும், சக்யம்
இயவர் – சண்டாளர்
இயவு – அனுமதி
இயற்கை – கடக்கை, வியாபாரம், யாத்ருச்சிகம், சுபாவம், யாத்ருச்சசம்ஸ்லேஷம்
இயற்சி – யோக்யதை
இயற்றல் – வரைத்தல், கடத்தல்
இயற்றுகை – உண்டாக்குகை
இயறு – பல்லு
இயன்ற – செய்யப்பட்ட

இயன்று – முயன்று
இரக்கம் – ஈடுபாடு, நெஞ்சுநெகிழ்ச்சி, நோவு படுகை
இரக்கொள்ள – இரக்க
இரங்குகை – ஈரப்படுகை, நோவு படுகை
இரசதம் – வெள்ளி, ரஜதம்
இரட்டை – துப்பட்டி, உத்தரீயம்
இரண்டி – ரணம்
இரணியம் – பொன்
இரதி – மன்மதன் தேவி, பித்தளை, காந்தள்
இரம்பம் – கஸ்தூரி
இரவலுடம்பு – பாதி திரேகம்
இரவி – சூரியன், மலை
இராடம் – கழுதை
இராப்படையேறுவாரைப்போலே –ராத்திரியிலே சண்டை பண் ணுவாரைப் போலே
இராவணம் – விளக்கு
இரிகை – சிதறுகை, ஆரவாரமும்
இரிய – போக, பெரியதும்
இருகை – மதவாரணமென்றும், கர்ப்பதாசர்களென்றும் கோயிற் பணி பெண்டாட்டி · பிள்ளைகளுக்குப் பட்டர் சாதித்த பெயர்
இருசு – வண்டியிருசு, ருசு, செவ்வை
இருணாள் – அட்டமி
இருப்புரி – எலும்பு
இரும்பை – பாம்பு
இருமருங்கு – ஸ்தலத்வயம்
இருமருங்கு தூயன் – உபயகுல விசுத்தன்
இருமை – பெருமையும், பரப்பும், இம்மையும், மறுமையும்
இருவி – தினைத்தாள், அரிதாள்
இருள் – நிரயம், கறுப்பு, மை, யானை, மறப்பு, துய்க்குமயக்கு
இல் – கிழத்தி, சரீரம், கிருஹிணி
இல்லம் – கிருகம்
இல்லாடம் – நெற்றி
இலக்கை – மாசஜீவிதம்
இலக்கினை – அடையாளம், முத்திரை
இலஞ்சி – குணம், மதிள், புனுகு, மாமரம், வேலி, கிடங்கு, அங்காடி , காவல், காடு
இலடு – குதிரை
இலவங்கம் – லவங்கம்
இலாங்குலி – நாளிகேரம், செங்காந்தள்
இலாறி – குதிரையின் வாய்நீர்
இலைக்குரம்பை – பர்ணசாலை
இலைத்தலைச்சரம் – வாயம்பு
இலையகலப் படுகை – மிகவும் பாரிக்கை, ஒருவனுக் கொரு வஸ்துவிலே அறிநிவேசம் உண்டானால் அந்த வஸ்துவை அனுபவிக்க வேண்டுமென்ற பாரிப்பு
இவ்வருகே – இப்பாலே
இவருதல் – ஏறுதல்
இழக்கு – தண்ணிமை
இழக்கை – துளைக்கை, இடுகை
இழவு – இழந்து போகை
இழிகுலம் – ஹீனகுலம்
இழித்தகன் – தண்ணியன்
இழிப்பு – பழிப்பு
இழுது – நெய், பேதை
இழுதை – பேதை
இழை – ஆபரணம்
இழைத்தல் – கூற்றமும், மாற்றமும்
இழையீடு – பொல்லாங்கு
இளக – மறைய
இளமறி – குதிரைக்குட்டி

இளமை – தண்மை, காமமும்
இளவாடை – சூக்சும வஸ்திரம்
இளிம்பு – அசாதுர்யம்
இறஞ்சி – மரவுரி
இறத்தல் – கடத்தல், மிகுதி
இறப்பு – மிகுதியும், பொக்கும்
இறவல் – ஆசை, அறவியும்
இற்வு – இறக்கல், இறவாது நாசம்
இறவுளர் – குறவர்
இறவை – ஏணியும் பட்டிலும்
இறுக்குவாதம் – நரம்பை இறுகப் பிடித்துக்கொண்டு மூச்சுவிடப்போகாத வாதம், அவிக்குதராய்ச் சற்றும் சலியாதே இருக்கிறவர்கள்
இறுக்கை – ஒடிக்கை, அழிக்கை
இறுகல் – சிக்கென, சங்கோசம்
இறுத்தல் – தங்கல், செப்பல்
இறுப்பு – அவயவம்
இறை – சுவாமி, சரீரம், அல்பம்
இறைகள் – சுவாமி சந்திகள்
இன்பம் – சுகம், ஆசை, கர்மம், காட்சி
இன்பு – இனிமை, ரசம்
இன்மை – இனிமை, பிறப்பு
இன்னதளை – இம்மாத்திரம்
இன்னியர் – பாணர்
இன்னாதாகை – வெறுப்பு
இன்னே – இப்படியே
இனம் – கிளை, மச்சு, சுகம், ஒப்பு, சமூகம், உபதானம்
இனன் – உபதானம்
இனிமை – நன்மை, ஏஸ்யதை
இஷ்டசித்தி – பிரயோஜனாந்தரங்களைச் சொல்லுகிறபுராணம்

## ஈ

ஈ – நாசம்
ஈக்குகை – நடத்துகை
ஈகை – கொடுக்கை, அழிக்கை, வாங்குதல், ஈகைச்செட்டி, சந்தனம்
ஈங்கு – இங்கு
ஈட்டம் – கூட்டம்
ஈட்டிய – திரட்டிய
ஈடல்ல – சத்ருசமல்ல
ஈடழிகை – கெட்டுப்போகை, பலஹானி
ஈடு – குழை, வலி, ஒப்பு, பெருமை, கற்பகம், கனகம், பலம், ஜோடு, இடுதல், அதிகாரம், அழிகை, எழுச்சி, அதிகம், குறைத்தல்
ஈடுபடுகை – அடிபடுகை, துக்கம், அவகாஹிக்கை
ஈடுபாடு – பிராவண்யம்
ஈண்டு – இப்போது
ஈண்டுதல் – திரளுதல்
ஈத்தல் – கொடுத்தல்
ஈத்து – இழிந்து
ஈத்தொத்தி – ஈ முதலான ஐந்துக்கள் விழாமறக்கட்டுகிற மேற்கட்டி, மேற்கட்டி
ஈமவனம் – சுடுகாடு
ஈயுவன் – இராவணன்
ஈர்மை – ஈருகை, ஈரப்பாடு, ஈடுபடுத்தல்
ஈரப்பாடு – சினேகர்
ஈரம் – ஈரப்பாடு, குளுத்தி, சங்கம்
ஈரரி – இரண்டு பிளவு
ஈரவன் – சந்திரன்
ஈரியாய் – நெஞ்சு நெகிழா நிற்கை
ஈரிலை – சூரியன்
ஈழம் – கள், பொன்
ஈளை – கோழை

ஈறிலி – தெய்வம்
ஈன்ற – பெற்ற
ஈன்றான் – பிதா, பரமன்
ஈன்றுகை – காட்டுகை
ஈனம் – முயல், இழிவு, தண்ணியது, பொல்லாங்கு, குறைவு
ஈனன் – சுக்ரன்

## உ

உக்க – முடிய
உக்கம் – விசிறி, மருங்கு, பசு, கோழி, ஆலவட்டம், கால்விசிறி
உக்கை – முடிகை
உகட்டு – தலைமண்டியிட்டு
உகப்பு – விடுப்பு
உகம் – பூமி, நாள், முடிவு, உரகம்
உகவை – உடம்பு, வெறுப்பு, காமம்
உகளித்து – அதிசயித்து
உகளுகை – சஞ்சரிக்கை, தலை மண்டியிடுகை
உகினம் – புளிமா
உச்சி – ஆதித்யன், நுனி, மலை, முடி, நண்பகல்
உச்சிவீடு – பகல் விடுகை
உசாவுகை – சொல்லுகை
உசிதன் – பாண்டியன்
உடக்கு – மிடுக்கு
உடகு – மிடுக்கு
உடம்பிடிகை – வேல்
உடல் – உடைமை, பொருள், அலங்காரம், பால்யம்
உடலாக – உசிதமாக, சாதனமாக
உடலார்ந்த – உள்ளே
உடலான – சூசகமான, நிர்வாகமான
உடன்கேடு – ஒருவன் கேடு தன் கேடாயிருக்குமவன்
உடன்படுக்க – சம்மதிக்க
உடன்று – கோபம்
உடை – அணி, செல்வம், கூறை, உடைமை, புடைவை, உள்
உடைதல் – அழிதல்
உடைமை – பயப்படுகை
உடையார் – உடைமையுடையவன், சுவாமி
உண்டறுக்க – அனுபவிக்க
உண்டி – ஊண், சோறு, உண்டல்
உண்ணுகை – நினைக்கை, உத்தேசிக்கை, அனுசந்திக்கை
உண்மை – யதார்த்தம், சுபாவம்
உணக்கி – துவளும்படி பண்ணி
உணங்கு – வியாதி, நெல், பேய், கழுது, பரண், இளைக்கை
உணம் – ஊண்
உணர்ச்சி – ஞானம்
உயர்திணை – சேதனச்சொல், சம்போதனை
உயர்ந்தோர் – ஞானிகள்
உயர்ந்தோர் மாட்டு – ஞானிகள்
உயருகை – உசாவுகை, வார்த்தை சொல்லுகை
உயிர் – காற்று, சீவன், ஆத்மா, தேகம், மனசு, பஞ்ச சக்தி, பிராணன்
உயிர்க்கொலை – பிராணன் மாத்திரமிருக்கக் கொல்லுகை
உயிர்ப்பிடம் – மூச்சுவிடுமிடம்
உரம் – சரீரம், மார்பு
உரவு – உரப்பு, மார்பு, விஷம், உதரம், உரகம்
உரி – தோல்
உரிச்சொல் – நிகண்டு
உரிகூறை – வஸ்திர முதலாகக் கொள்ளையிடுகை

உரித்து – தகுதியாதல், அந்தரங்கமாதல்
உரிமை – பரிவு, பிராப்தி
உரிய – தகுதியாக
உரு – தேகம், சொல்லுகை, அழகு,
மிடுக்கு, மான், வஸ்து,
விக்கிரகம், விருஷபம், தழும்பு
உருஞ்ச – உரச
உருத்தல் – தோற்றம், கோபம்
உருத்து – சித்தம்
உருப்பொலிகை – தழும்பேறுகை
உருமகம் – யாகம், சரீரம், நிரஜெயம்
உருமாய்கை – சொரூப நாசம்
உருவம் – அழகு, ரூபம், தேகம்
உருவில் – செம்பஞ்சு
உருவெளிப்பாடு – பிரத்யக்ஷம், மானச
சாக்ஷாத்காரம்
உரை – சப்தம் கொள்ளுகை,
ராகவிஷயமாகை,
ராமாயணம்
உரைக்க – கேட்க
உரைக்கை – சொல்லுகை
உலகம் – குணம், பூமி, திசை,
உயர்ந்தோர் மாட்டு
உலகு – லோகம்
உலங்கு – பெருநுளம்பு, கொசுகு,
விசேஷம்
உலப்பு – நாசம்
உலம் – நீர், காற்று, துன்பம், வால், வலி,
பிணம்
உலரி – உதறி
உலவல் – துறந்தோர்
உலவி – மதிள்
உலாவுகை – சஞ்சரிக்கை
உகசம் – உரல்
உலோடிகை – லோகிக்கை
உவணப்புள்ளு – பெரிய திருவடி
உவணம் – கருடன், கழுகு
உவத்தலை – பொருத்தமில்லாமை
உவந்து – விரும்பி
உவமை – உபமை
உவர் – கடல், ஆனை, பூனை
உவர்த்தலை – பொருத்தமில்லாமை
உவரி – கடல்
உவருகை – சலியாதே இருக்கை, மேலே
போகை
உவலை – ஹேயம்
உவன் – அதூர பிரக்ரு டன்
உவாத்து – உபாத்யாயர்
உழக்குகை – சஞ்சரிக்கை, மந்திக்கை
உழலுகை – அலமருகை, சஞ்சரிக்கை
உழலை – பலகணி
உழவு – கிருஷி
உழுவை – புலி, எருமை
உழை – மான், இடம்
உழைக்கை – தடமாறுகை
உற்றார் – சம்பந்திகள், பந்துக்கள்
உறச்சத்திலே – பிரபலமானதிலே
உறல் – ஸ்பர்சம்
உறாவுதல் – துக்கம்
உறுகை – கிட்டுகை, சத்ருசமாகை,
சேருகை, பிரயோஜனம்
உறுப்பு – அவயவம்
உறுப்புத்தோல் – முழுத்தோல்,
கிருட்ணாஜினம்
உறுவது – சீரியது, தருவது, உசிதம்,
யுக்தம்
உறைப்பு – மிடுக்கு, நல்ல வாய்ப்பு
உறையல் – பிணக்கல்
உறையூர் – மருத நிலம்
உன்தனை – உன்னத்தனை
உன்னம் – அன்னம்

உன்னல் – ஆராய்தல், நினைத்தல், ஆசை, உருகுதல், படுகை

உன்னி – ஓர்ந்து

ஊ

ஊக்கம் – கர்வம், நிறக்கை, மிடுக்கு, வலி, உயர்ச்சி, ஊன் மிகுதி, பலம், நிலை, நீர்மை

ஊகம் – புலி, குரங்கு

ஊச்ச – பயம்

ஊசல் – ஊஞ்சல், உஞ்சல்

ஊசி – எழுத்தாணி, சூறி

ஊட்டி – கழுத்து, ஆகாரம், யோக்யதை

ஊடல் – விஸ்லேசம், பிரணயகோபம், சம்போகமத்யத்தில் பிறக்கும் கலகம்

ஊடலுக்கை – விவேகிக்கை

ஊடு – உள், நடு, அந்தரங்கம்

ஊத்திருக்கை – ஊத்திக்கொண்டிருக்கை

ஊதி – கலவி, வட்டி, பரி, சிவிகை

ஊதியம் – விருத்தி

ஊதியன் – சேரன்

ஊதை – குளி, காற்று

ஊமைக்கூறன் – அனக்ஷரமாகச் சொல்லுகை

ஊத்தல் – நடத்துதல்

ஊரழிபூசல் – ஊரழிந்துபோம்படியான கலகம்

ஊரா – ஊருகை, உலாவுகை

ஊருகை – பரவுகை

ஊருணி – ஊர்க்குளம்

ஊரெண்ணை – எண்ணெயாடல்

ஊழ் – முறை, பழைமை, பகை

ஊழ்மை – நாசம், பழைமை

ஊழி – முறை, காலம், சிரு டி, விதி, ஊகம், பூமி, சம்சாரம்

ஊழிலை – பழுத்து விழுந்த இலை

ஊற்றங்கால் – ஊன்றுகோல்

ஊற்றம் – நிலையுடைமை, அறிவுடைமை, உரைப்பு, அனுசந்தானம்

ஊற்றிருக்கை – ஊறிக்கொண்டிருக்கை

ஊறத்தல் – பசை

ஊறு – தீமை, கொலை

ஊன் – மாமிசம், சரீரம், பருமன், ரசம்

ஊன்காரர்கள் – மாமிசம் விக்கிரயம் பண்ணுமவர்கள்

ஊன்று – உடம்பு, ஸ்பரிசம்

ஊனம் – மிகுதி, குறை, சங்கோசம்

எ

எ – ஒளிவு, தகுதி, அழகு

எஃகு – கூர்மை, வேல்

எஃகை – எழும்புகை, போகை, ஏவுகை, தள்ளுகை, பண்ணுகை

எஃபண்ண – விடுவிக்க

எஃபுண்ண – விடுகை, பண்ணுகை

எக்காரம் – பொன்

எகமமத்தளி – பறை விசேஷம்

எங்ஙனே – எந்தப் பிரகாரம்

எங்கே – இதென்ன கட்டமோ

எச்சம் – சந்தானம், குறை, வேள்வி, புத்திரன்

எஞ்சல் – கருங்கல், ஒழிதல், குன்றாமை, கேடு

எட்டச்சி – எழுச்சி

எட்டியார் – செட்டிகள்

எட்டுக்கெழுநாக்கு – ஒலை முறி

எடையெடுக்கை – நிறுக்கை

எண் – மனோரதம், மனசு, எண்ணப்பட்டது, எட்டுத்திக்கு

எண்டோளி – துர்க்கை

எண்ணம் – நெஞ்சு

எணங்கு – கரடி
எத்தஂஃகம் – அதிசயம்
எத்தாது – எட்டாது
எத்துக – தெற்கு
எதிர்ச்செறிக்க – எதிரே போக
எதிர்ப்பறை – எதிரே உத்தரஞ் சொல்லுகை
எந்தை – உபகாரகன், சுவாமி
எந்நாள் – எந்தக் காலம், அநேககாலமும்
எம்மனை – என் தாயார்
எம்மனோர்கள் – எம்போல்வார், மாத்ருசாஹா
எம்மா – ரக்ஷை, கட்டழகு, வலி, சாமம், சத்ருசம்
எம்மைக்கும் – எத்தைக்கும்
எம்மைத் தொத்தி – எம்மைத் தொடங்கி
எமம் – கட்டழகு, வலி, இனிமை, சமுத்திரம், பொன்
எய் – அழகு
எய்க்கை – இளைக்கை, பரிகசிக்கை
எய்கை – சொல்லுகை, பொருத்துகை, தேடுகை, சிட்டுகை, ஒப்பு, மிகுகை
எய்த்து – இளைத்து
எய்த்துகை – இளைக்கை, மனக்கிலேசம்
எய்தல் – பொருத்தல்
எய்திலர் – கிட்டாதவர்கள்
எய்துகை – கிட்டுகை, அனுபவிக்கை
எய்ப்பு – இளைப்பு, ஆபத்து, சிதிலகரணனாகுகை
எயில் – பட்டணம், திரிபுரம், கானம், மதிள்
எரி – கேட்டை நட்சத்திரம், அக்னி, கிளி
எருத்தம் – அபிமானம்
எருத்து – கழுத்து
எருமணம் – செங்கழுநீர்
எல் – தகுதி, இரவு
எல்கல் – எதிர்தல்
எல்லவன் – சந்திரன்
எல்லாரி – கைமணி
எல்லி – ராத்திரி, சந்தியாகாலம்
எல்லே – ஆச்சரியம், ஒளி, ராத்திரி, எதற்காக
எல்லை – உலகு
எல்லைக்கள் – எல்லைக்காலம்
எல்லைச்சதிரி – அவசான சமர்த்தை, சாதுரியத்திற்கு எல்லையாயிருக்குமவள்
எல்லைநிலம் – சீமாபூமி
எலா – தகுதியில்லாத
எலி – கள்ளு
எலியெலும்பன் – துர்பலன்
எவ்வம் – துக்கம், தனிமை
எவ்வல் – அம்பாதல், துக்கமாதல், ஏவுகை
எழக்கை – அறிக்கை
எழப்பாய்ந்து – உயரக் கிளம்பி, குதித்து
எழில் – வண்ணம், இனிமை, அழகு, நிறம், நன்மை, தேஜஸ்
எழிலி – மேகம்
எழிலு – அழகு
எழுகல் – தியாகம்
எழுகும் – ஈடுபடும்
எழுதல் – இரங்குதல், இகழ்ந்திருத்தல்
எழுத்துவளங்கள் – உரோக்ஷர வித்தியாசம்
எழும்பூண்டெல்லாம் – முளைக்கிற முளையெல்லாம்
எள்நெய் – நல்லெண்ணெய்
எளவணி – காலாள்
எளிவரவு – சௌலப்யம், இளைப்பு, லாகவம், ஏழ்மை
எற்றுகை – ஏறுகை

எற்றுதல் – புடைத்தல், எறிதல்,
இடிக்கை

எற்றே – என்னே, ஆச்சர்யே

எறக்கொழிக்க – மேலே தள்ள

எறி – தறுகை

எறிகை – கொடுக்கை, அனுக்கை

எறிஞர் – சத்ருக்கள்

எறிவுபடாமல் – தப்பாமல்

எறு – இடபம், சிம்மம்

எறும்பி – யானை

எறுளி – பன்றி

எறை – சரீரம், சுவாமி, அத்யல்பம்

என்கிற கணக்கிலே – மரியாதையிலே

என்செய்யானாய் – என்ன
செய்யாதானாய்

என்பு – எலும்பு, புல்

என்றிய – எதுக்காக

என்னம்பு – என்ன, எதுதான்

என்னே யென்பாருமில்லை – ஐயையோ
என்பாருமில்லை

## ஏ

ஏ – ஓ என்றபடி

ஏக்கம் – பயம், விசாரம்

ஏகாந்தமான – தகுதியான

ஏங்கல் – ஒலி, இரங்கல், ஏங்குதல்

ஏங்கி – இளைத்து, பயப்பட்டு

ஏங்குகை – பொருமுகை

ஏசுதல் – பழித்தல்

ஏட்சி – எழுச்சி, விகாசம்

ஏடீ – என்னடி

ஏடு – பொல்லாங்கு, இதழ்

ஏணி – ஏணியும், மானும்

ஏத்தகம் – அதிசயம்

ஏத்தல் – மலை, பெருமை, முதல், மாடு

ஏதம் – துக்கம், பொல்லாங்கு

ஏதல் – ஒப்பு, சத்ருசம்

ஏதுகை – அனுபவிக்கை, கிட்டுகை

ஏந்த – தரிக்கப்பட்ட

ஏந்தல் – தேங்கல்

ஏந்துகை – வசிக்கை

ஏமம் – சமுத்திரம், காவல், இரவு,
மையல், கலை, ஏமாப்பு

ஏமாந்துகை – அனவதானம்

ஏமாற்றம் – துக்கம், ஏக்கம், ஒளிவு

ஏய்கை – கிட்டுகை, அனுரூபமாக
இருக்கை

ஏற்வு – யோக்யதை

ஏரண்டம் – ஆமணக்கு

ஏவல்ல – எய்யவல்ல

ஏவாய் – எய்யப்பட்ட

ஏவுண்ட – எய்யப்பட்ட

ஏவுண்ட மிருகம் – ஆப்புண்ட மிருகம்

ஏழ்மை – ஹீனம்

ஏழை – அறிவுக்கேடு, சாபலம், மிருது

ஏறிக்கொழிக்க – மேலே தள்ள

ஏறினபிரயோஜனம் – பலித பிரயோஜனம்

ஏறு – யோகம், சிம்மம், விருஷபம்

ஏறுவான் சாருங் குதிரை – ஏறுகிற
நலக்குதிரை

ஏன்றியவென்னில் – எதற்காக என்றால்

ஏனம் – பன்றி

ஏனோர் – சத்ருக்கள்

## ஐ

ஐங்கணையான் – காமன்

ஐங்கரன் – கணபதி

ஐசுககசுகை – அச்சு

ஐஞ்சிலம் – கற்பூரம், லவங்கம்

ஐஞ்ஞை – ஆடு, அழகு, அறிவுக்கேடு

ஐது – நொய்து, அல்பமும்
ஐம்பால் – முடி
ஐய – அச்சம், அழகு
ஐயம் – கப்பரை, பொழுது, பிச்சை, அனுமானம்
ஐயமார் – மூத்தவர்கள்
ஐயன் – அப்பன், மூத்தோன், சுவாமி, காளி, இடைச்சி, சாத்தன்
ஐயார் – முனிவரும், தேவரும்
ஐயே – அழகு, இடைச்சொல், கோழை, இருமல், பதி, நாயன், சுவாமி, அந்தரம்
ஐவகைப்பொன் – பஞ்சலோகம்
ஐவனம் – மலைச்சாரல் விளைநெல்

## ஒ

ஒக்கல் – சுற்றம்
ஒக்கலிக்கை – கொட்டுகை
ஒக்கலை – பக்கம்
ஒகாட்பாடு – சாமர்த்தியம்
ஒகை – மாதராடல், கலன்கள்
ஒங்க – ஒரமாக, கெட்டியாக வென்றபடி
ஒசன்ன – அழகு
ஒசிகை – ஒடிகை, சுருங்கை, துவளுகை
ஒசித்தல் – கொடுத்தல், இறுத்தல்
ஒசிந்து – கரைந்து
ஒசிவு – ஆயாசம், சம்போகத் தளர்த்தி
ஒட்டற்ற பொன் – ஒட்டமைக்கப் போகாத பொன்
ஒட்டி – ஒட்டிட்டு, எட்டு, இட்டுக் கொண்டு
ஒட்டு – கூடுகை, சேருகை
ஒட்டுகை – இசைக்கை
ஒட்டுவட்டில் – கலசப்பானை
ஒடியெறிகை – காட்டுவழியில் இரண்டருகும் மரத்தை வெட்டித் தள்ளுகை
ஒடுக்கு – மாடு, சங்கோசம், தனம், சமர்ப்பித்து
ஒடுக்குமாடு – முட்டுக்கோல்
ஒடுங்கல் – இளைப்பு, சங்கோசம்
ஒண்மை – அறிவு, அழகு, சாமர்த்தியம், அறிவு, நன்மை
ஒத்ததரத்தனாய் – ஒத்திருந்து
ஒத்தல் – நீங்கல்
ஒத்திமை – விலை, ஒருமை, ஒருபடிப்படுகை
ஒத்துதல் – அறிதல்
ஒதறி – விசாரித்தல், சொல்லுதல்
ஒதுங்கல் – போகல், ஒதுங்குகை
ஒப்பிடுகை – பெருக்குகை
ஒப்பனை – அலங்காரம், அழகு
ஒப்பித்து – அலங்கரித்து
ஒப்பு – இசை, பொறுத்தல், கட்டழகு
ஒப்பூண் – சுகபோஜனம்
ஒரு – ஆடு
ஒருங்கலிடுகை – சமாதானம் பண்ணுகை
ஒருங்குகை – ஓரிடத்திலே போகை
ஒருக – நீங்கல்
ஒருத்தலைத்து – ஒருமிச்சு, ஏகறவித்து
ஒருதலை – ஒருதட்டு
ஒருதலையானால் – தனக்கேபரமானால்
ஒருநீர்ச்சாவி – ஒரு ஜலமில்லாதே பட்டுப்போகை
ஒருபாட்டம் மழை – ஒரு பாறல்மழை
ஒருபோகி – ஏகபோகமாக, ஒருக்காலே
ஒருபோலி – ஒரு பிரகாரத்திலே ஒப்பு
ஒருமம் – நீர்நிலை
ஒருவந்தம் – சம்பந்தம்

ஒருவுதல் – நீங்குதல்
ஒல் – சப்தம், ஒடுங்கி
ஒல்கியொல்கி – அடிமேலடி
ஒல்லாமை – இகழ்தல்
ஒலங்கு – கொசுகு, விசேஷம், பெருத்த நுளம்ப
ஒலி – இடி, ஓசை, காற்று
ஒலியல் – புடைவை – நோய், நிதி,தோல்
ஒவ்வோக்குழி – நிலத்திலே அக்ஷராப்யாசம் பண்ணுகிறவர்கள்
ஒழிஞ்சான் முட்டு – உறுப்பாகாத முட்டு
ஒழுக்கம் – ஆச்சாரம்
ஒழுக – இசைய
ஒழுகல் – பிரவாசம், நெடுகலும்
ஒழுகு – கொள் பிரமாணம்
ஒழுகை – பண்டி
ஒள்ளி – பொன், சுக்கிரன்
ஒளியிழை – ஆத்மபூஷணம்
ஒளிவட்டம் – கண்ணாடி, சக்கிரம்
ஒளிறு – வெளுப்பு
ஒற்கம் – வறுமை
ஒற்றைக்குழை – ஒருகாதிலாபரணம்
ஒன்றுதல் – கூடுதல், சேருகை, ஒருப்படுதல்
ஒன்னார் – சத்ருக்கள்

## ஓ

ஓ – கொடுமை, ஆச்சரியம்
ஓக்கம் – உயர்த்தி
ஓக்கி – ஆக்கி, உயரும்படி பண்ணி
ஓக்குகை – நோக்குகை
ஓகரி – பாகம்
ஓச்ச – அடிக்க
ஓக்கல் – ஒட்டல், அடித்தலும்
ஓச்சு – அடித்து
ஓசனை – யோசனை
ஓசை – ஒலி, பாட்டு, ஞானி, வாழை
ஓட்டடுவர் – ஓடிவருவர்
ஓடுகை – நடையாடுகை
ஓடை – முகப்படம், பட்டம், கிடங்கு, நீர்நிலை, மணிப்பட்டம், மலையின் வழி
ஓத்து – அத்யயனம்
ஓதம் – உப்புகை, அலை, சமுத்திரம்
ஓதமை – உண்டி, சோறு, பெருமை
ஓதனம் – உண், சோறு, பெருமை
ஓதி – மயிர்முடி
ஓபாதி – ஒப்பு, அத்தைப்போலே
ஓம் – கொடுத்து, அனுமதி பண்ணி, அங்கீகாரம், ஆச்சரியம்
ஓம்பி – பேணி, சோம்பி
ஓம்புகை – வளர்த்துகை
ஓமெறிகை – அங்கீகாரம்
ஓய்கை – பலஹீனம்
ஓர்ந்து – ஆராய்ந்து
ஓர்ப்பு – பொறுமை, விசாரிக்கை
ஓர்வு – நிரூபணம்
ஓரம் – பக்ஷபாதம், நுனியும், சகாயம்
ஓரளவிலே – ஒரு அவசரத்திலே
ஓருதல் – ஒருவுதலாய் நீக்குகை, ஆராய்தல்
ஓலக்கத்தைக் கிளப்பி – ஓலக் கத்தைவிட்டு
ஓலமிடுகை – பெருமிடறு செய்து கூப்பிடுகை
ஓவித்து – முடித்து
ஓவியம் – சித்திரம்
ஓவியர் – சித்திரகாரர்
ஓவுதல் – ஓய்தல்

## க

ககம் – கணையும், புள்ளும்

கங்கணம் – தோள்வளை

கங்கையான் – கங்காதரன்

கச்சங்கம் – பிரதிக்ஞை

கச்சரி – நெருப்பு

கச்சு – நெருப்பு, மீன், முலைக்கட்டு

கசம் – இரும்பும், கசமும்

கசிகம் – பக்ஷபாதம், வியூகம்

கசிகை – ஸ்நேகம்

கசை – கடுவாள், வியாபாரம்

கட்கு – கண்ணிற்கு

கட்டக்குடியன் – பொல்லாதவன், இறையிறுக்கமாட்டாதவன்

கட்டடங்க – எல்லாம்

கட்டணம் – பூஜ்யம், கட்டில்

கட்டம் – கஷ்டம், குகை

கட்டளை – திருத்தம், சாதுரியம்

கட்டளைப்பாடு – கட்டளையும், பாடும்

கட்டு – அரண், இயல்பு

கட்டுரை – நற்சொல், முழுச்சொல்

கடகு – கட்டல், கனைதல், பரிசை

கடம் – கடன், பாவமும், யானை, மதம், காட்டுவழி

கடவுள் – தேவதை, முனி, தெய்வம்

கடறு – அருஞ்சுரம், யானை, அத்தம், வேண்டியபடி

கடன் – பிராப்தம், சுபாவம், திருடம், பாவம்

கடாய் – தாண்டுகை, கடக்கை, நடத்துகை

கடாவுதல் – நடத்தல்

கடி – சிறப்பு, தேன், பெருமை, அழகு, ஏணி, புதுமை, தேன், பரிமளம்

கடிதர – சீக்கிரம், சடக்கென

கடிது – சீக்கிரம்

கடிப்பு – குண்டலம்

கடை – வாசல், தலைக்கடை

கடைக்குழை – எல்லாவற்றுக்கும்பின்

கடைத்தலை – எல்லோருக்கும்பின், தலைக்கடை

கடைப்பணி கூட்டம் – பிடரியில் நாக்குவாய்

கடைப்பிடி – பிடித்துவிடாதேயிருக்கை

கடைப்பிடிமின் – ஒருப்படுங்கள், கடவதென்றுபிடிமின்

கடைய – தேய

கடையா – துட்டபசு

கடையிடு – ஒப்பம், அப்பிரதானம்

கண் – ஞானம், பூமி, பீலிக்கண், இடம், கிருபை

கண்கலக்கம் – மனத்திரிவு

கண்கின்ற – கனவு காண்கின்ற

கண்குழிவு – விடாய்

கண்செறி – முடி

கண்செறிவு – மறைக்கை

கண்டகம் – முள், வாள், அரிகை

கண்டல் – முள்ளி, தாழை

கண்ணநீர் கலுழுவன் – கண்ணீர் வெள்ளமிடுவோன்

கண்ணும் கருத்தும் – ஞான சக்திகள்

கண்ணுவர் – கன்னார்

கண்ணாளன் – நிர்வாகன்

கண்ணழிவு – விளம்பரம்

கண்ணெச்சில் – திருட்டி தோஷம்

கண்ணொந்தார் – கண்நோவுக்காரர்

கண்ணோட்டம் – கிருபை

கண்பறைய – கண்பூச்சி பறக்க

கண்மணி – பிரதித்வனி

கண்மறந்து – கண்பூத்து

கண்வட்டம் – கபடம், பிரத்யக்ஷம்

கணயம் – உழலை மரம், கோட்டை மதில்

கணாங்கன் – கண்டாலும் காணாது போலிருக்கை
கணி – பூங்கொத்து, கண்ணி
கணிச்சிக்க – சிந்திக்க
கணிசிக்கை – மதிக்கை, உத்யோகப்படுகை, இடம், கிருபை
கணையம் – உழலைத்தடி
கத்தல் – எண்ணல்
கத்துகை – கூப்பிடுகை
கத்துவரம் – கத்வரம், கமனசீல
கத்தை – கழுதை
கதக்கம் – பொறாமை
கதகத – பொறாமை, சீற்றம்
கதம் – கோபம், மதம்
கதவம் – காவல், கதவு, காத்தல்
கதித்தல் – கோபம், பொறாமை
கதுவ – பற்ற, ஸ்பரிசிக்க, கவ்வுகை
கதவி – சினத்து
கதிர் – இரவி, மதி
கதிரம் – கருங்காலி
கதுவாய்வடு – புண்வடு
கதுவுகை – கவ்வுகை
கதை – தண்டாயுதம், வார்த்தை
கந்தப்பர் – நட்டுவர்
கந்தம் – ஆனைத்தறி, கல்பகம், ஒக்கம்
கந்திரிவர் – கந்தர்வர்
கத்துகம் – குதிரை, குறிஞ்சிநில மன்னர் குதிரை, பந்து
கப்பட்டம் – கப்பரை
கப்பணம் – கப்பரை
கப்பம் – பகுதி, இறையிடுதல், நடுக்கம்
கப்பு – திரள், கிளை, தோள், ஸ்கந்தம்
கபாடம் – கவாடம், கதவு
கபாலி, ருத்ரன், துர்க்கை
கபோதம் – கொடியுத்திரம்
கம் – ஆகாசமென்றபடி
கம்பம் – யானைத்தறியும், நடுக்கமும்
கம்பில் – அப்பம்
கம்பு – சங்கும் கம்பும்
கயத்த – தகைய
கயம் – தோள், பெருமை, கசம், குளம், யானைக்கன்று க்ஷயம், திரள்
கயல் – மத்ஸ்யம்
கயிரை – எத்தம்
கரக்க – குவிக்க
கரக்கை – ஒளிக்கை, வியாபிக்கை
கரகம் – ஆலங்கட்டி, நன்மை, கங்கை
கரந்த – மறைக்கை, கரந்தை
கரவு – முதலை, ஆசை, கோர்வு
கரவுகை – ஒளிக்கை
கரி – சாக்ஷி
கரிபூசுகை – திருட்டிபரிகாரமாகப் பானையில் கரியைப் பூசிவைக்கை
கரு – பொன், மேகம், காரணம், மனது, சக்தி
கருத்து – தாத்பர்யம், மிடுக்கு, புத்தி
கருதுகை – நினைக்கை, பொடிகை
கருமை – கருப்பு, இருட்சி, பெருமை
கருவி – காரணம், கத்தி, இந்திரியம், சாதனம்
கருவில்லி – ஆண்பிள்ளை
கருவிளை – காக்கணம்
கருவுகலம் – கருகூலம், ஸ்ரீபண்டாரம்
கருவூர் – பாண்டியன் படைவீடு
கல் – தொனி
கல்லார் – கீழ்மக்கள்
கல்லாரம் – செங்கழுநீர், மஞ்சள்
கல்லி – சகடம்
கல்லு – மலை, ஞானி, பெருமை
கல்வி – அறிவும், பயிற்சியும், ஞானம், மிடுக்கு, சாதுர்யம்

கலந்து – கூடி
கலப்பு – சிநேகம்
கலம் – பாத்திரம், ஆபரணம், கப்பல்
கலம்பகம் – விசித்திரமாலை, சமுதாயம்
கலமர் – பாணர்
கலர் – கீழ்மக்கள்
கலவகம் – காக்கை
கலவி – ஊடாதே கூடினபடியேயிருக்கைக் கலவை, சேறும், சாந்தும்
கலாபம் – பாண்டியன், குதிரை, பீலிக்கண் வட்டம், குதிரை
கலி – திருடம், கறுப்பைச் சொல்லுகிறது, பாவம்
கலிக்கச்சு – புடைவையிலே கட்டின கச்சு
கலிக்கட்டு – நாராலே கட்டுகை
கலிகை – பூ மொட்டு
கலிங்கம் – உடையழகாம்படியுடுக்கை
கலிங்கமுடுத்து – உடையழகாம்படி உடுத்து
கலுழ்வன் – வெள்ளமிடுபவன்
கலுழி – வெள்ளம், காட்டாறு, கலங்கிய நீர், கலக்கம், கானாறு
கலுளன் – கருடன்
கலை – வஸ்த்ரம், சாஸ்திரம்
கலைவணக்க – கலையென்றாக்கத்தைத் தோர்ப்பிக்கும்
கவ்வம் – மிடுக்கம், ஆரவாரம், துக்கம்
கவ்வை – முகம், ஆரவாரம்
கவடி – பலகறை
கவடு – கிளை, அசைவு
கவர்தல் – வாங்கல், விரும்புதல்
கவர்வு – துக்கம்
கவளம் – மதம், கபோலம்
கவி – மந்திரி, புலவர், சுக்கிரன், குரங்கு
கவிகை – கொடை, கொடுக்கை
கவிர் – முருக்கு
கவிள் – கீழ்வயிறு
கவின் – அழகு
கவினம் – கடுவாளம்
கவுரியர் – பாண்டியர்
கவருகை – கிரி கிக்கை
கவுண்டர் – மலையர்
கவுள் – கதுப்பு, மதம், பரிமளம்
கழகம் – திரள், சமூகம், ஓலக்கம்
கழஞ்சி – வராகனெடை
கழப்பு – விளமம்
கழற்றெதிர்மறை – நியமனத்திற்கெதிரே உத்தரஞ்சொல்லுகை
கழறுகை – நியமிக்கை
கழனி – வயல்
கழிகை – மிடுகை
கழிகோல் – தலைக்கோல், தொரட்டுக்கோல்
கழிதல் – காதல், மிகுதி, கடந்திடல்
கழிவு – நெருங்கின
கழுக்காணிக்கண்ணன் – புண்டரீகாக்ஷன்
கழுது – பேய், வண்டு
கழுதை – பிரலம்பன்
கழுந்நதர் – தடி
கழுநீர் – செங்கழுநீர்
கழை – தீம்பு, தழை, குருத்து, மூங்கில், கருப்பங்குருத்து, புனர்பூசம், வண்டில்
கற்று – இளங்கன்று
கற – இறை
கறங்குகை – சப்திக்கை, கழலுகை
கறி – மிளகு
கறிவளர் கொடி – மிளகுக்கொடி
கறுப்பு – கொடிது
கறுமை – கறுப்பு, பெருமை

கறுவி – கோபித்து, ஆக்ரஹித்து
கறுள் – கறுப்பு
கறை – கறுப்பு, தண்மை, நீலம், தோஷம், சீற்றம்
கறையடி – யானை, கறை, உரல், உரல் போலேயிருக்கிறவடி
கன்றுகால்மாறுகை – இடையர், பிறருடைய கன்றுகளைத் தன்பசுவி லேயூட்டவிட்டுத் தன்னுடையகன்றை யவர்கள் பசுவிலே யூட்டவிட்டுஇது உன்னுடையகன்றென் பார்கள்
கன்னம் – செவி, கன்னக்கோல், கதுப்பு
கன்னல் – வெல்லம்
கன்னறு – காய்ந்து, சீறி
கனகம் – பொன்
கனகை – செறிகை
கனம் – பொன், செறிவு, சப்திக்கை
கனவி – தீ, பன்றி, இரவி
கனவு – ஏளி, சொப்னம், மையல், துயில்
கனி – மருத நிலம், வேங்கை மரமும்
கனைதல் – சந்தித்தல்

## கா

கா – காக்கவேண்டும், உத்யானம், சோலை, துலை, வருத்தம், வலி
காகோடியர் – கூத்தர்
காசறை – கஸ்தூரி, மணி, மயிர்ச்சாந்து
காசு – மாணிக்கம், அச்சுத்தாலி, மணி, பொன்
காசை – நாணல், காயாவும்
காஞ்சுகி – சட்டை
காட்டம் – குதிரை, விறகு
காட்டி – பன்றி, பிடாரி
காட்பு – அழல், வைரம் பற்றுகை
காடி – நெய், சோறு
காடுகத்தல் – அரண்யரோதனம்
காடுகத்து – காட்டுக்கூப்பீடு
காடுபட – விஸ்தாரமாக
காடுமோடை – விஷமஸ்தலம்
காண்டலுமே – கண்டவளவிலே
காணம் – நஞ்சு, கருமை, ஊதிடு கொம்பு
காத்தக – குவிக்க
காத்திரம் – உடல், குதிரை, கூத்து, சித்தம், கரி
காத்துகை – குவிக்கை
காத்தூட்டவல்ல – காத்தனுபவிக்க வல்ல
காத்தூட்டுகை – மேலே மேலே ரசிப்பிக்கை
காதலி – ஸ்திரீ
காம்பு – பட்டு, காடி, மூங்கில்
காம்புத்துகில் – எழுத்துச்சேலை
காமர் – அழகு
காமரம் – கானவிசேஷம்
காமன் – வண்டு, திப்பிலி
காமுறுகை – ஆசைப்படுகை
காய்கை – ஒட்டுகை
காய்தல் – கொல்லல்
கார் – இருள், பருவம், அழகு, கறுப்பு, கருங்குரங்கு, தண்மை, பெருமை, சீற்றம், கர்ப்பம்
கார்முகம் – வில்
கார்வலயம் – கடல்
காரண்டம் – நீர்க்காக்கை
காரிகை – அழகு, அழகுடைய பெண்
காரிகையார் – பக்தி பாரவஸ்யமுடையார்
காரியப்பாடற – பிரயோஜானாந்தர மின்றிக்கே
காரியப்பாடு – பிரயோஜனாந்தரம்

கால் – வெற்றிலைக்கால், வண்டியும், காற்று, வேர், தண்மை, கர்ப்பம்
கால்கட்டு – பந்தகம்
கால்தாழுகை – விளம்பிக்கை
காலிடைப்பாசம் – காலினிடையிலே உத்யத்திலேயிருக்கிற சங்கம், சூச்சும சரீரம்
காலிலி – உரகம், காற்றும்
காவலம் – நெருப்பு
காவற்கலி – வாழை
காவற்சோர்வு – காவற்றப்பு
காவனம் – பந்தல்
காவி – கருநெய்தல்
காவில் – காவடிக்குப் பெயர்
காழகம் – புடைவை, கறுப்பு, கழுதை
காள்பு – கொட்டை
காளவனம் – சுடுகாடு
காளி – தேன்
காளை – பாலைநிலத்தரசன்
காற்றக்க – குவிக்க
காற்றுவாளம் – காற்றுவாக்கு
கான் – வண்டு, தேன், கானமும், நறுநாற்றம்
கான்று – உமிழ்ந்து, உண்டாக்குகை
கானகநாடன் – முல்லைத்தலைமகன்
கானல் – ரவிகிரணம், உப்பளம், நீர்நிலம், கடற்கரைச்சோலை, நெய்தல் நிலம்
கானவர் – வேடர்
கானவனோகம் – குரங்கு

## கி

கிச்சன் – நெருப்புகி
கிஞ்சு – முலை
கிஞ்சுகம் – பலாசப்பூ, கிளியும்
கிட்டி – தலையீற்றா, தாளம், சாந்து
கிடத்த – செறிந்த
கிடாவிட – படுக்க
கிண்டல் – கிழித்தல், நெருங்குகை
கிண்டுகை – கிளறுகை, கோதுகை
கிண்ணகம் – ஆற்றுப்பெருக்கு
கிணறுவார – துருவெடுக்க
கிணுக்கு – சங்கேதம் பண்ண
கிருமி – புழுவென்றபடி
கிருஷி – சாதனானுட்டானம்
கில்லான் – அசமர்த்தன்
கிலாம் – வேடிக்கை, பிரணயரோஷம், வெறுப்பு
கிலாய்க்கை – வெறுக்கை, கலகத்தில் உத்தி
கிழத்தி – உரியவள், யோக்யன்
கிழாய் கிழாயர் – பெரியவருக்கும் பெரியவரென்றபடி
கிழாயர் – பெரியோர்
கிழாயன் – சக்திமான், பெரியவனும்
கிழிக்குறை – அபூர்த்தி
கிழிமிரோ – சிரீரோ
கிழுமுகை – செறிகை
கிள்ளுகை – சொல்லுகை, மேற்கிளம்புகை, உண்டாக்கை, வந்திக்கை
கிள்ளை – கிளி, நசிக்கை
கிளமா – கிளியும், குதிரையும்
கிளர்த்தி – உயர்த்தி
கிளவி – வார்த்தை, சப்தம்
கிளறுகை – கோட்சொல்லுதல்
கிளை – தொனி, பந்து, ஸ்கந்தங்கள், சீறுகை
கிளைஞர் – சம்பந்திகள்
கிளைத்தல் – நெருங்கல், நிறைதல், அனுபவித்தல், சப்தம்

கிறி – வழி, பொய், முன்கையிற்பவழம், விரகம், சாதுர்யம், பஞ் சரம், யந்த்ரம்
கினிய – அமர, கபளீகரிக்கை

## கீ

கீசகம் – குரங்கு, மூங்கிலுப்
கீதம் – இசை, மூங்கில், வண்டு
கீரம் – பால், கிளி, காரிப்புள், தீபம்
கீராதே – சொல்லாதே
கீழ்க்கன்று – தம்பி
கீழாண்டைச் சிகை – பழங்கணக்கிலே நிலுவை நீக்குதல்
கீழோலை – உள்ளோலை

## கு

குக்கில் – செம்போத்து
குக்கூடல் – நாரை
குக்கை – தடுமாறுகை
குசாண்டு – சில சொல்லுகிறாப்போலே யுபேசரிக்கை
குசை – கடிவாள வியாபாரம், வேகம்
குசை தாங்குகை – கடிவாளம் எட்டிப்பிடிக்கை
குஞ்சம் – நாழியும், கவரியும்
குஞ்சி – மயிர் முடி, பரிமளம்
குட்டம் – பள்ளம், குளம், கடைநாள்
குட்டிக்காடு – குப்பம்
குட்டிச்சுவர் – ஏகாந்தமென்றபடி
குடங்கால் – மடி
குடங்கை – முன்னங்கை
குடந்தம் – திரட்சியும், கூப்பீடும்
குடநீர்வார்க்கை – குடத்தாலே நீர்வார்க்கை
குடநீராட்டுகை – அபிஷேகம்பண்ணுகை
குடம் – பசு, நகரம், கூற்றம், கருப்புக்கட்டி, சுட்டுப்பசு, எருமை
குடற்றுடக்கு – சரீர சரீரி சம்பந்தம்
குடி – கிராமம்
குடிமக்கள் – படாள், படியாள்
குடிமை – அடிமை
குடிமை கொள்கிற – பிராப்தம் பண்ணிக்கொள்கிற
குடில் – குடிசை
குடிவாயுடன்பாடி – எல்லோரும் சங்கேதமாக
குடைந்து – அவகாஹித்து
குண்டர் – நீசர்
குண்டி – ஆழம்
குணங்கு – நாற்றம், முடைநாற்றம்
குணதிசை – கிழக்குத்திக்கு
குணம் – குணம், பிணம், கயிறு, உள் புகுருகை
குணாலம் – குணாலக்கூத்து, தலைகீழாக ஆடும் கூத்துவிசேஷம்
குணில் – கணக்குக் கயிறு, குறுந்தடி, கடிப்பு, எறிகருவி (கருவியாவது, சாதனம்)
குணலை – கரை
குணு – புழு
குத்தத்துகை – துக்கத்தைப் பண்ணுகை
குத்துடைவாள் – அரையிற்கத்தி
குத்துண்கை – தள்ளப்படுகை
குதி – தாவுகை
குதிரி – தேகம், அடங்காப்பெண்
குதுகலிக்கை – கௌதூகலம், சங்கிரமிக்கையும்
குதை – வியாபாரம், ஜோடு, உத்தியோக தடுமாற்றம்

குந்தம் – நோய், வெளுப்பு, ஆயுதம், குருக்கத்தி, குற்றம், திருநாமம், தப்பாமை, குருந்தம், குதிரை, ஹேயம், கைவேல், வியாதி

குந்தளம் – மயிர்

குந்தா – தப்பப் போகாதிருக்கை

குப்பாயம் – அரைச்சட்டை

குடி – புருவம், ஊர், குலம்

கும்பி – யானை, சேறு, நிரயம்

கும்மாயம் – குழையச் சமைத்த பருப்பு

குமர்தண்டம் – திருமுற்றவெளி

குமரி – குமாரி, காளை, கங்கைத் தாழை

குமல் – அரிவாள்

குமிழி – மதகு

குமுதம் – செவ்வாம்பல், நெய்தல், குவளை

குமுறுகை – வாய்விடமாட்டாதே உள்ளே கிலேசப்படுகை, தடமாறுகை

குமை – விஷம், பாதை

குமைத்து – துகைத்து

குரக்கு – குரங்கு

குரக்குகை – வணக்குவாதம் பிடித்த கை

குரங்கன் – இந்திரன்

குரண்டம் – கொக்கு

குரம்பை – குடிசை, சரீரம்

குரவர் – கௌரவர்

குரவு – விருக்ஷ விசேஷம், தாரித்திரம்

குரவை – திருக்குரவை

குரு – பெருமை, வியாதி, நிறம், பாரம், வியாழம்

குருக்கணம் – முலை

குருகு – நாரை, கோழி, மூலநாள், பெண்மை, இளமை, குருக்கத்தி, குவளை

குருசி – ராஜா

குருடன் – சுக்கிரனும், அந்தனும்

குருதி – இரத்தம், உரம், செவ்வாய், சிவப்பு

குருவி – மூலநட்சத்திரமும், புள்ளும்

குருளை – பிள்ளை

குரை – சப்தம், பரப்பு, கரை, பெருமை, இடைச்சொல்

குலம் – திரள், குலமென்று வர்ணமாய் நிறத்தைச் சொல்லுகிறது, கோத்திரம்

குலாவுகை – வியாபாரிக்கை, வளைவு, விஸ்தாரம்

குலிங்கம் – ஊர்க்குருவி, குதிரை

குலை – கரை

குவடு – சிகரம், மலை, மலையினுச்சி

குவளை – நெய்தல், செங்கழுநீர், கருநெய்தல், மேகம்

குவளை விழி – குவளைப் பூ

குவால் – பெருமை, மிகுதியும்

குவாள் – அதிகம்

குழகன் – பவ்யன், சிறுபிள்ளை, விரகன்

குழருதல் – லீலாரசங்கொண்டாடுகை

குழமணன் – மரப்பாச்சி

குழல் – இலைக்குழல், ஆய்க்குழலும்

குழவு – இளமை

குழறுகை – அனக்ஷரமாகச் சரசமாகப் பேசுகை

குழாம் – சமூகம்

குழி – வயிறு, குழியும்

குழியிலக்கால் கழுவுகை – சிராத்தம்

குழுமி – கலசி, சிலாக்யதை

குழுமுகை – கலசிகை

குழை – தளிர், சேறு, குண்டலமும், பேய், தழை, காதிற்பணி

குழைக்கை – கலக்கை

குழைகை – மிருதுவாகை

குழைச்சரக்கு – மனசை இளகப் பண்ணுகிற சரக்கு, கெட்டுப்போகிற சரக்கு
குளப்பு – உதைப்பு
குளம்பு – உள்ளங்கால்
குளம் – நுதல், வெல்லம், மலை, காடு, குறிஞ்சி நிலத்தூர்
குளவி – பச்சிலை
குளன் – குளம்
குளிக்க – அழுந்தவாதல், கொப்புளிக்கவாதல்
குளியம் – வேங்கையும், முண்டையும்
குற்றேவல் – கைங்கர்யம், உசிததாஸ்யம்
குறங்கை – துடை, மடியும்
குறடு – கதுப்பு
குறந்தபுளி – புழுகு
குறளை – நாற்றம், குடி
குறிக்கோள் – ஹிருதயத்திலே கொள்ளுகை
குறிஞ்சி – மலையண்டை, இசை விசேஷம், குரங்கு வளைதல், செம்முள்ளி, மலைச்சாரல், ஒருபண், குப்பம்
குறிஞ்சி நிலம் – அனுபவஸ்தலம், பர்வதபர்யந்தம்
குறிஞர் – அறிவார்
குறித்தல் – நினைத்தல்
குறிப்பு – நினைவு, மனது, லக்ஷியம், அடையாளம்
குறுக்கு – சக்கை
குறுந்தலை – தறுதலை அதாவது தாய் தகப்பனுக்கடங்காதபிள்ளை
குறுப்பு – அநீதி
குறுமை – தண்மை
குறுளை – கட்டி
குறை – திருமுடிக்குறை
குறைவறுப்பு – உலுப்பை
குன்றர் – வில்லியர்
குன்றுவர் – குறவர்
குன்னாங்குறிஞ்சி – காதிலேயே ஏகாந்தமாகச் சொல்லுகை
குனிக்கை – கூத்தாடுதல்

### கூ

கூகை – கோட்டான்
கூச்சம் – பயம்
கூச்சுமுறை – கூசவேண்டுமுறை, முறையாவது, பிராப்தியம் வரிசையும்
கூட்டம் – பிண்ணாக்கு
கூட்டுகை – உபதேசிக்கை
கூடம் – சம்மட்டி, வஞ்சனை
கூடல் – ஊடினபின் கூடுகை, கூடுகை, வட்டமாகக் கோட்டைக்கீறி, அதிலே சுழிசுழியாகச் சுற்றுச்சுழித்து, இரண்டு சுழியாகக் கூடினால், இரட்டைப்பட்டால் கூடுகை, ஒற்றைப்பட்டால் கூடாமை என்று சந்தேகம், மதுரை, பாண்டியன் படைவீடு
கூடற்கோன் – மலயத்வஜன்
கூடார் – சத்ருக்கள்
கூடுபூரிக்கை – குவிக்கை, கூட்டைபூரிக்கையும்
கூத்து – அடுப்பது, ஒருத்தன் வேறுபாஷையை அனுசரிக்கை, அனுகாரம்
கூதல் – குளிர்ச்சி
கூதை – கூதையுமூதையுங் குளிர்பனிக் காற்று, முளி, பனிக்காற்று, தடுமாற்றம் உத்தியோகம்

கூந்தல் – கேசி, மயிர், பீலி, கமுகு
கூர் – மிகுதி, கூர்மை
கூந்தல் – மிகுதல்
கூரியர் – கூர்மையையுடையவர்
கூரியன் – வெட்டியன், குரூரன்
கூருதல் – அதிகமாக மிடுகை
கூடுவளை – வில்வம்
கூலம் – கடற்கரை, வரம்பு, வீதி
கூவல் – அழைத்தல், முடித்தல்
கூவி – அழைத்து
கூவிதி – தேர்
கூவியர் – மடயர்
கூவிரம் – தேர், குவளை
கூவிளம் – வில்வம்
கூவுதல் – கரைதல், மொழிதல்
கூழ்ப்பு – சம்சயம்
கூழ்மை – கிருத்ருமம், நைச்சியம்
கூழி – சமூகம்
கூழை – மயிர்முடி, பொன், சிறகு, வீலி,
மாதர்மயிர், உரகம், நடுவு, சேறு
கூழைகுழல் – மயிர்முடி
கூழைத்தனம் – கிருத்திருமம்
கூழைப்பார்வை – கள்ளநோக்கு
கூற்று – காலன், கிளவி
கூறல் – சொல்லல்
கூறு – பாகம், துண்டித்தல்
கூறுகை – கூத்துக் கூறுகை,
அழைக்கை, வேண்டாதது
கூறுசெய்கை – கணியம் பண்ணுகை
கூறுசெய்வான் – கம்புகட்டி
கூறைப்பை – புடைவைப்பை
கூனல் – சங்கு, கூனலும்

## கெ

கெச்சம் – முலை
கெடங்கு – அகழ்
கெடிலணங்கு – மூதேவி
கெடுமரக்கலம் – கெட்டசொங்கு, ஓடம்
கெண்டல் – களறு
கெழில் – மிடுக்கு
கெழுமிகை – மிகுதி, கிளம்பின மொட்டு
கெழுமுதல் – செறிதல், வைத்தல்
கெழுமை – பெருமை, காந்தி, தாளர
கெழுவுகை – நெருங்குகை

## கே

கேகயம் – மயில்
கேசர் – சிம்மம், உள்மயிர்
கேதம் – துக்கம்
கேதன் – காமன்
கேதை – தாழை
கேயம் – கானம்
கேரளன் – சேரன்
கேவலம் – பணித்தல்
கேழ் – நிறம், ஒப்பு, எழுச்சி, சிரத்தை,
கிளர்ச்சி, அழகு, இசை, ஒளி
கேழ்மை – சினேகம்
கேழ்வன் – நாயகன்
கேழல் – பன்றி, இடபம்
கேள் – உறவு, நாயகன், ஒப்பு
கேள்வி – அறிவு, சப்தம், புராணம்,
சாஸ்திரம், வேதம்,
வியாகரணம்
கேள்விகொண்டு – அறிவித்து
கேளி – மங்கையர் விளையாட்டு

## கை

கை – ஒழுக்கம், விடம், குற்றம், சிறுமை, வியூகம், ஞானம், கொடுக்கை
கைக்கடங்கினது – வளை
கைகழிகை – தப்பிப்போகை
கைக்கிளை – யாழின் நரம்பு
கைக்கிளைத்தலைவி – ஒருதலைக் காமத்தையுடைய தலைவி
கைக்குறியாப்பை – கடன்
கைக்கூட்டமிட்டாப்போலே – அணிவகுத் தாப்போலே
கைக்கூட்டன் – காவற்காரன்
கைக்கொடுமானம் – கைக்கொள்ளுகை
கைக்கோலி – கைகூப்பி
கைகரக்கை – ஒளிக்கை, மறைக்கையும்
கைசிகர் – வன்னியர்
கைத்து – பொருள்
கைதவம் – வஞ்சனம், அர்த்தவாதம், பொய், துக்கம்
கைதவன் – பாண்டியன்
கைதை – தாழை
கைதொட்டு – நோக்கி
கைதொடுமானம் – சாதனம்
கைதோடன் – சகாயம்
கைநிரை – கைவிளக்கு
கைப்பட்டது – பலவந்தம்
கைப்பரணி – மணியாசனக் கல்லு
கைப்புடை – குடவரை
கைப்புலி – யானை
கைப்புனை – கெடுகை, செப்பம், பூ, விழி
கைபுகுந்தான் – செய்தான்
கைபுகுருகை – ஸ்வசமாகை
கைமா – யானை
கைம்மாறு – பிரத்யுபகாரம்
கைமேலே – பிரத்தியக்ஷமாக
கையடியுண்டு – ஈடுபட்டு
கையடை – அடைக்கலம்
கையர் – கள்ளர்
கையரி – தேடல்
கையன் – மன்னவன்
கையாள் – சேவகர்
கையிலக்கை – அஞ்சலி, நித்யசம்பளம்
கையுடை – கட்சி
கையுறவு – துக்கம்
கையொக்க – கையெடுக்க
கையொத்து – அஞ்சலி பண்ணி
கையோலை செய்கை – முறியெழுதிக் கொடுக்கை
கைவரிந்து – கைகடந்து
கைவருகை – நினைத்தபடி காரியங்கொள்ளுகை
கைவளைக்கை – அபிநயம்பிடிக்கை
கைவாரம் – வாழ்த்துதல்
கைவிஞ்சுகை – ஆதிக்யம், மட்டு, விஞ்சுகை

## கொ

கொக்கரை – சங்கு, வளை, வில், பரணி
கொக்கின்பழம் – மாம்பழம்
கொக்குவாயும் படு கண்ணியும் – கடுக்கன் கம்பியை ஒத்தையிலே போட்டும் மடித்தும் நெருக்குவதற்குக் கொக்குவாயும்படுகண்ணியு மென்று பெயர்
கொங்கன் – கொங்குநாட்டு வெள்ளம், சேரன்
கொங்கு – பூந்தாது, தேன், பரிமளம், மேற்குத்திக்கு
கொங்குமரம் – மாமரம்
கொங்கை – முலை, திக்குமுலை, குணம், தீம்பு

கொச்சகம் – கொச்சாறு
கொஞ்சுதல் – அபூர்ணோக்தி
கொட்டகம் – கொறடு
கொட்டு – கரை, கொம்பு
கொட்டை – பஞ்சுச்சுருள்
கொடங்கல் – நீர்நிலம்
கொடி – ஸ்திரீ
கொடிச்சி – குறமகள்
கொடிஞ்சி – தேர் மொட்டு
கொடியன் – ஸ்வார்த்தவரன்
கொடிறு – கதுப்பு, பூசம்
கொடு – இதழ், வளைவு, பெட்டிமை, கரை
கொடுக்கை – வளைகை
கொடுங்கை – உள்ளங்கை
கொடும்பை – குளம், அடவி, பச்சிலை
கொடுமா – வில்லு
கொண்டல் – கீழ்க்காற்று, மேகமும்
கொண்டி – அங்கசாசனம், களவு
கொண்டியிலே – களவிலே, அங்கசாசனத்தில்
கொண்டை – இலந்தையின் கனி, மயிர்முடி
கொண்டைக்கோல் – ஆறுகள் மடுக்களிலே பள்ளங்களுக்கு அடையாளமாய் நடுகிற கோல்
கொந்தளம் – நெறிப்பு, சிலுக்கிடுகை
கொந்தி – கோத்து
கொப்பூழ் – திருநாபி
கொம்பது – செடியிலே பருத்தியிருக்கச் செய்தே முன்னே தானே பருத்தி விற்க அங்காடி பாரிக்கை
கொம்பை – திரட்சி, திண்மை, வட்டம், முலை, அழகு, தாழ்ச்சி
கொம்மை – பெருமை, முலை, வட்டம், அழகு, தாழ்ச்சி, திரட்சி
கொய்தல் – பறித்தல் திண்மை
கொரிகை – அகப்பை
கொல் – வையம், வருத்தம், அசைவு, சம்சயம்
கொல்லி – தேசவிசேஷம்
கொல்லை – சோலை, கொல்லையும், கொல்லாபுரம், சோழன், படைவீடு, வரம்பின்மை, ஏவல், கொல்லுகை
கொலை – கொடுமை, அழகு
கொழுத்தவன் – அதிகாரி
கொழுநன் – நாயகன்
கொழுமை – அழகு, பெருமை, செவ்வி
கொள் – மிளகு, தேஜஸ், கொடுத்தல், குவிதல், சிறை
கொள்கை – கொடுக்கை, வாங்குகை, உடைத்தாகை, பாவம், செறிவு, ஸ்வீகரிக்கை
கொள்ளிவட்டம் – குறைக்கொள்ளியைச் சுழற்றுகை
கொள்ளுகை – பாகவிஷயமாகை
கொளவு – பாட்டு
சொறளுத்திவிக்கை – பற்றவைக்க
கொளுவி – கோத்து
கொற்றம் – வெற்றி, வலி, பலம்
கொற்றவன் – சுவாமி
கொற்றவை – துர்க்கை
கொற்றி – அரசன், இளங்கன்று, துகைக்கை
கொற்றை – குறைவு, தோஷம்
கொறடு – கதுப்பு, கடைவாய்
கொன்னே – அச்சம், பெருமை, பொழுது, பயனில்லாமை

## கோ

கோக்கை – தொடுக்கை

கோகனகத்தவள் – பெரியபிராட்டியார்

கோகனகம் – கடம்பு, தகரை

கோகிலம் – பல்லி, துளை, அந்தி, குயில்

கோகு – நிருத்த விசேஷம், அடைவு, கேடு

கோகுகட்டு – ஆவாலங்கொட்டுகை

கோங்கு – பூந்தாது

கோசந்தடம் – பண்டாரம், கூத்தர், கொடியர்

கோசம் – ஆண்குதிரை, முட்டை, பண்டாரம், கருகூலம், முறை, வீதி, மொழி

கோசரம் – விஷயம்

கோசிகம் – பட்டாடை, சாமவேதம்

கோசை – அசக்தன்

கோட்டம் – கோன், படப்பை, நாடு, கோயில், பாசம், குரங்கு, பசுவின்கூட்டம், தர்மம், குளம், வயல், வலி

கோட்பாடு – கட்டளைப்பாடு, மிகுதி, சாமர்த்தியம் கொண்ட உத்யோகம், நல்லபதம்

கோட்பு – பெரியமுலை, குளம்பு

கோட்புக – அரும்ப

கோடல் – காந்தன், கொள்ளீரென்ற வழக்குச்சொல்

கோடாரம் – முத்துக்கடிப்பு

கோடாலம் – முத்துத் தாவடம்

கோடிகம் – பூந்தட்டு, துகில், கொண்டிகை

கோடிய – கூட்டமாயிருக்கிற

கோடியைக் காணியாக்குகை – கோடிய ரத்தையிட்டுக்காணி ரத்னங்கொண்டாப் போலே

கோடிரம் – கோடு, வளைவு

கோடு – கரை, கொம்பு, சங்கம், வளை, கொடுமை, சிவரம்

கோணம் – குதிரை, மூக்கு, வாள்

கோணை – ஒலி, சந்தேகம், முறுக்கு

கோத்தல் – சேர்த்தல்

கோத்திரம் – குலம், பூமி, பேர், மலை

கோதம் – வட்டில்

கோதுகலம் – குதூகலம், சிலாக்யம்

கோதை – மயிர்முடி, மாலை, மொய்ம்பு, மிடுக்கு

கோப்பு – விசித்ர சன்னிவேசம்

கோமளம் – மாணிக்கம், இளமை, அழகு

கோமான் – மூத்தோர், பன்றி

கோயிற்கட்டணம் – அந்தப்புரம்

கோயிற்கூழைத்தனம் – வியாதி, சிலாக்யமான கிருத்திருமம்

கோயிற்சாந்து – கோவென்று ராஜாவாய் ராஜார்ஹமான சாந்து, சிலாக்கியமான சாந்து

கோயின்மை – கோளராஜா,
இன்மை – இல்லாமை; நிர்வாக ரில்லாமையென்றபடி, அநீதி ஆராய்ச்சியில்லா தவிடத்தில் செயல்

கோரண்டம் – குறிஞ்சி

கோரம் – வட்டில், கொடுமை, குதிரை, பூமொட்டு

கோல் – அம்புக்கோல்

கோல்வளை – மழுங்கல் வளை, தர்சநீயமானவளை

கோல்வாசி – நிலமளக்கிற கோல்

கோல் விழுக்காடு – நாலுபேருக்குப்
பொதுவான க்ஷேத்திரத்
திலேயதி லொருவனுக்கு
ஒரு க்ஷேத்திரத்திலே
யாசையாயிருந்தால்,
கோலாலே அளந்து,
பிரிக்கச் செய்தே
தனக்கு ஆசையுண்டான
நிலத்தில் கோலளவு
வந்து விழுந்தாப் போலே.

கோலம் – நீர்க்கொழுந்து, இலந்தையின்
கனி, அழகு, ஒப்பனை, பன்றி

கோலி – மயிர்

கோலே – மன்னன், திசை, கனம், நீர்,
ஏவல், விழி, பசு, கணை

கோவிநாயகம் – கோவில்லாத நாயகன்

கோவியன் – யமன்

கோவை – மாலை

கோழம்பம் –குழப்பம், சம்சயம்

கோழி – மயில், உறையூர்

கோழை – ஸ்லேசம்

கோள் – மிடுக்கு, அழகு, ஒளி, சிறை

கோள்சொல்லுகை – இட்டுச்சொல்லுகை

கோள்பட்ட – கொள்ளப்பட்ட

கோள்பாடு – உத்தியோகம்,
சாமர்த்தியம்

கோள்புக – பழுக்க, அரும்பு,
நூதனமாகப்
புட்பிக்க

கோளகம் – கண்ணாணி,
கண்ணிற்பாவை

கோளி – உபகாரம், புதுமை

கோளுண்கை – சுவீகரிக்கப்படுகை

கோளை – இசைப்பாட்டு

கோறம்பு – தீம்பு

கோனை – கொடுமை, நிர்ப்பந்தம்

## ச

சக்கரம் – மலை, ஆழி, பூமி, வட்டம், பிறப்பு, ஒருபுள், தேரினுருள், பெருமை
சக்கிரவத்து – விருது
சகடை – வண்டி, பொய்
சகு – தெய்வவுணர்வு, சோறு
சகுடம் – செம்பு
சகுல்லை – அப்பம்
சகுனம் – புள்ளு, கிழங்கு, நிமித்தம்
சகுனி – நிமித்தம், பறவை
சங்கம் – சங்கப்புலவர், கையில் வளை, சங்கு, புணர்ச்சி, கணைக்கால், சிநேகம், கூட்டம், சங்கேதம்
சங்காயம் – பயிரென்று சங்கிக்கப்படுவதான புல்லு (யானைப்புல்லு)
சங்கு – கோழி, சங்கும், முத்து, முத்துச் சிப்பி, குச்சிக்கோல்
சங்கை – பெருமை, சங்கம்
சங்கையற்றிருந்தேன் – வளையிழந்திருந் தேன், சங்கையில் லாமலிருந்தேன்
சட்டித்தல் – அழித்தல்
சட்டைப்புரை – அரைச்சட்டைப்புரை
சடக்கு – வேகம்
சடங்கு – ஆசாரம், அதிகாரம், விரதாதிகர்மங்கள்
சடம் – ஊர்க்குருவி
சடை – வேர், ஜடை
சத்திரம் – குடை, சத்ரம்
சதி – நிலவு, கடல், மழை, கற்பூரம்
சதிர் – நேர்பாடு, உறுவதும்
சதுக்கம் – நாற்சந்தி
சதுரம் – சாதுர்யம்
சந்தம் – நினைவு, சந்தனம், நிறம், அழகு, சந்தர்ப்பம்
சந்தி – சந்தியாகாலம்
சந்திரம் – பொன்
சந்தை – வாக்யம்
சந்தோகன் – சாந்தோக்ய பிரதி பாத்யன்
சம்பம் – எலுமிச்சை வயிரம்
சம்பரதம் – கண்கட்டுவித்தை
சம்பாவிக்கை – பூஜிக்கை
சம்பு – நாவல், ஜம்பு, நரி, இரவி, வச்சிரம், வலி, எலுமிச்சை, சங்கு, சிவன், சுவயம்பு
சம்போர் – பூதம்
சம்மை – ஒப்பு, சங்கிராமம்
சமண் – சித்தாந்தம்
சமழ்த்தல் – நாண், வருத்தம்
சமிதையிடாமாணி – சமிதைப்புழு
சயம் – சமூகம், ஸ்வயம், ஜயம்
சயமரம் – தோரணமரம்
சரக்கற – வஸ்துவாய் மதியாதே செய்கை
சரக்கறுதி – அபதார்த்தம், பிரயோஜனமில்லாமை, சரக்காளாய்வைதார்த்தத்தை யுடையவனாய்
சரக்கு – வஸ்து, பதார்த்தம்
சரத்தை – சிரத்தை
சரதம் – நிச்சிதம், தப்பாமல்
சரம் – நீர்
சரவணம் – பந்தல், பரிசல்
சரவிடுநாண் – சரப்பளி
சரி – கையிடுவளை, ஒப்பு, வழி
சரிக்கை – நிலைப்பேருகை
சரிதை – பிச்சை, சரிதமும்
சரிவளை – வளைவிசேஷம்
சருவம் – சட்டுவம், பானையும்
சல்கியன் – சுக்கிரன்
சல்லியம் – பன்றி
சலகு – செத்தை, முத்துச்சிப்பி
சலசயனம் – ஜலசயனம்
சலஞ்சலம் – சங்கு
சலநிதி – கடல்
சலம் – வியாஜம், வெறுப்பு, ஜலம், நடுக்கம், கோபத்தினாலே பிடித்ததை முட்டவிவாதிக்கை, வைரம், பொய்

சலார் – வேடர்
சவகு – முத்து, முத்துச்சிப்பி
சவடி – பூணல், ஆபரணம், முத்துமாலை
சவி – ஒளி
சழக்கு – தோஷம், பொல்லாங்கு, குற்றம், நிந்தை, பொய், பிறர்க்கு அனர்த்தாவகமான வார்த்தை
சறையமணி – ஒரு மணி விசேஷம்

## சா

சாக்கியர் – பௌத்தர்
சாகசம் – மேன்மை, இடமும்
சாகதுண்டம் – அகில்
சாகம் – தேக்கு, வெள்ளம், கீரை
சாகரம் – கடல், பேய்
சாகாடு – பண்டி
சாட்டு – பாதிக்கை
சாட – பாதிக்க
சாடு – வண்டு, சகடும்
சாடுகை – உதைக்கை, சொல்லுகை, நலிகை
சாணாச்சீரை – சாணாத்துணி
சாத்தான் – அருக்கன், புத்தனும்
சாத்தாக – சமூகமாக, ஒருக்காலே, திரளாக
சாத்து – திருநாள் சமூகம்
சாத்துகை – சொல்லுகை, தட்டிச்சாற்றுகை
சாதாரி – ராகம்
சாதி – ஜாதி, சிறுசெண்பகம், பிரம்பு, மூங்கில், கள், குலம், தேக் கு, சீந்தல்
சாது – ஸாது, நன்றாக
சாந்தாத்தி – ஆலவட்டமும், பீலியும்
சாபம் – குட்டி, வில்லும்
சாபிப்ராயம் – சிரத்தை
சாம்பு – பறை, பொன்னும்
சாம்புதல் – கூம்புதல், சாய்தல், பழம்பூ
சாமம் – சிலாக்யம்
சாய்கரகம் – தண்ணீர்ப்பந்தல், கரகம்
சாய்விலாத குறுந்தலை – தாய்க்கடங்காத தறுதலை
சாயல் – நிறமும், அழகும், ஒருவனைப்போலே இருக்கையும், சமுதாய சோபையும், மேம்பாடு, ஒப்பு, மேன்மை
சாயை – லாவண்யம், சாந்தி
சார்ங்கம் – மான், வண்டு, சாதகப்புள், ஓரம்
சார்வு – ரக்ஷகம், அண்டை, புகலிடம்
சாரசம் – பெருநாரையும், குருகும்
சாரல் – பர்வத பர்யந்தம்
சாரார் – கிட்டார்
சாரிகை – அடைகை, காக்கை, அழகு
சாரிகைச் சொல்லு – அவ்யயம்
சாரிகை வந்த சடக்கு – சாரியாக வந்த வேகம், யுத்த பூமியிலே வருகை
சாருகை – ஆஸ்ரயித்துக்கொண்டிருக்கை
சால – மிகவும்
சாலகம் – பூமொட்டு, வலை, ஜாலம்
சாலப்பணியுடைத்தாயிருக்கும் – மிகவும் பிரயாசத்தையுடைத் தாயிருக்கும்
சாவளி – கள் வாணிச்சி
சாழல் – தோழி, நாயகன், விளையாட்டு, சங்கேதப்பேச்சு ஒருத்திக்குப் பேரும், சுழல்காற்று, பூவை, சுங்கம்
சாறு – சாரம், உத்சவம்
சானகி – திருமகள்
சானு – முழந்தாள், வரையின் சாரல், ஜாநு

## சி

சிக்கம் – தூக்கணாங்குருவி
சிகண்டி – மயில், அலியும்
சிகழிகை – வாசிகை, மயிர்முடி
சிகை – நிலுவை, லங்கை, பொய்யன்
சிங்கல் – குன்றல், கேடல்
சிங்கவிளக்கு – தலையிலே சாணியை வைத்து விளக்கேற்றுகை, வாலிலே பந்தங்கட்டி எரிக்கை
சிங்காமல் – நீங்குதல், கேடும், குறையும், சங்கோசியாமல்
சித்திரப்படம் – பொத்தகம்
சித்திரபானு – இரவி, தீ
சித்திரன் – தச்சன், ஓவியன்
சிதகு – குற்றம்
சிதடன் – அந்தகன், மூடன்
சிதலை – நோய், கறையான், துணி
சிதை – கீழ்மகள்
சிதைக்குகை – செதுக்குகை
சிதைக்கை – அழிக்கை
சிதைவு – அழிவு, கேடு, குறைத்தல்
சிந்தம் – புளியமரம்
சிந்தவிளக்கு – விரல்களிலே பந்தங்களைக்கட்டி யெரிக்கை
சிந்தாமணி – சேதநர் ஹிதசிதை பண்ணிக்கொண்டிருக்கிறமணி
சிந்திவிக்கை – சிதலமாக்குகை
சிந்து – பாட்டு
சிந்துக்காடுகை – பாட்டுக்கனு கூலமாகவாடுகை
சிந்துக்கு – பாட்டுக்கு
சிந்துக்கோன் – ஜயத்ருதன்
சிந்துகை – சிதறுகை
சிந்துதல் – சிதறுதல், போக்கவெண்ணுதல்
சிந்தை – மனசு, மனோவ்யாபாரம், ஹிருதயம்
சிந்தைநோய் – மனப்பீடை
சிமி – குடுமி, சிவரமும்
சிமையம் – மலையுச்சி
சிரஞ்செய்ய – ஸ்திரஞ்செய்ய
சிரம் – நெடுங்காலம், சென்னியும்
சிரை – நரம்பு, குரங்கு, தாரை
சில்லிகை – கல்லாடை
சில்லு – சில்வீடென்ற பூச்சி, சிலுகு
சிலதர் – ஆரியர்
சிலம் – உகிர், நெல்லு
சிலம்பு – மலை
சிலவம் – சட்டுவம்
சிலவர் – வேடர்
சிலிங்காரம் – சிருங்காரம்
சிலீமுகம் – வண்டு
சிலுகு – சண்டை
சிலும்புகை – சொல்லுகை, நெறிக்கையும்
சிலை – காந்தி, சிலையென்று காந்தியைச் சொல்லுகிறது, வில்லு, சீற்றம்
சிவட்கு – கோபம், துக்கம், தெப்பம்
சிவணல் – கூடுதல்
சிவந்து – சீறி (ஆவது கோபித்து)
சிவம் – நன்மை, முக்தியும்
சிவனிகைக் கச்சு – கட்டுக்கச்சு, பொன்னெழுதின கச்சு
சிவிகை – பல்லக்கு, சிபிகை
சிவீலென்கை – பொறுக்கப்போகாமை
சிழகி – ஏங்கி, சிணுங்கி, சிதிலமாய், இளைத்து
சிற்றவை – சிறிய தாயார்
சிற்றாளக்கொண்டான் – ஆச்சார்யன்
சிறந்து – கிட்டி
சிறப்பு – சம்பத்து, மோக்ஷம், நன்றி, அதிசயம், தகுதி, மிகுதி, போஜனப்பெட்டி
சிறாம்பி – தீனராய்
சிறாம்புதல் – சங்கோசிக்கை
சிறுக்கன் – சிறுபிள்ளை

சிறுகளம்புச்சேலை – எழுத்துச்சேலை
சிறுகை – சீறுகை
சிறுசொல்லு – பழிச்சொல்லு
சிறுசோறு – திப்பிச்சோறு
சிறுப்பு – சங்கோசம்
சிறுபுறம் – பிடர்த்தலை
சிறுமை – குற்றம்
சிறுவிரல் – சுண்டுவிரல்
சிறுவீடு – வைகறை, பனிமேய்த்தல்
சிறைக்கோல் – அம்பு
சிறைவைக்கை – நெருக்குகை
சின்னப்பூ – புட்ப விசேஷம்
சின்னம் – பெண், அடையாளம், சிறுமை,
சில்வானம்
சினம் – கோபம், துக்கம்
சினை – கவடு, கிளை, தழை
சினையாறு – பெருக்குக்கு முன்னே நீர்
பொசிகை

## சீ

சீக்கை – வளைக்கை, திருவலகிடுகை
சீத்த – பருத்த
சீத்தத்தீ – படவாமுகாக்னி
சீத்தர் – அசடர், கொத்து, தாள்
சீத்தீகை – கழிக்கை
சீதகன் – சுக்கிரன்
சீதை – உழும்படைச்சாலை
சீய்க்கை – தீய்க்கை, திருவலகிடுகை
சீயம் – சிம்மம்
சீர் – கணம், கீர்த்தி, ஒல்கல், அசை, பாரம்,
புகழ், செல்வம், அழகு
சீர்க்க – பெருக்க
சீர்பெற – நிறமாம்படியாக
சீர்மை – சுபாவமும், பெருமையும்
சீரகம் – திவலையும்
சீரம் – மரவுரி
சீருளியம் – தாமிரம்
சீலம் – ஸ்பாவம்
சீலிக்கை – பரிச்சயம் பண்ணுகை
சீவிக்கப்புக்கவாறே – சம்பத்துண்டானவா
சீவை – நாடகம்
சீற்றம் – சினம், கோபம், நாய்ப்படுகை
சீறுகை – கோபிக்கை

## சு

சுக்கை – வான்மீன், மாலை
சுகம் – கிளி, இன்பம், நன்மை
சுகி – கொண்டை, சுற்றம், தீ
சுகிர்ந்து – வகிர்ந்நது
சுகிருகை – வகிருகை, பிளக்கை, ஒடுகை
சுட்டல் – காட்டல்
சுட்டி – குறித்து, லலாடாபரணம், ஹேது,
பட்டம், நிமித்தம்
சுடர் – ஒளி, தளிர், விளக்கு
சுடர்க்கடை – மின்மினி, மயில்
சுடலை – சுடுகாடு
சுடிகை – சுட்டி, மயிர்முடி
சுடுவன் – உதிரம்
சுண்டன் – மூஞ்சூறு, சதையம்
சுண்டாயம் – ஸ்வார்த்தபரத்வம், கபடம்
சுண்டை – மது, சுண்டைச் செடி,
ஆனைத்தும்பிக்கை
சுணங்கன் – நாய்
சுணங்கு – சூர்ணம், ஒருநிருத்தவிசேஷ
சுணங்கை – அருதல்
சுணங்கையெறிந்து – மஞ்சட்பொடியை
இறைத்துக்கொண்டு
கூத்தாடி
சுணம் – சுண்ணம், மஞ்சட்பொடி,
முலைமேல் தோன்றும் நிறம், சுணை
சுணையுடைமை – ஞானபூர்த்தி
சுதை – சாந்து, வெண்மை, அமுதம்,
சுண்ணாம்பு, உடு
சுந்தரர் – கந்தர்வர்கள்
சுந்தரி – இந்திராணி, மூஞ்சூறு
சுந்திரம் – சாதிலிங்கம், அழகு

சும்பு – கடம்பு
சும்மை – சுமை
சுமடர் – போகிகள், சுமைகாரர்
சுமடு – சரீரம், சும்மாடும்
சுமாலி – கள்ளு
சுரந்தி – கங்கை
சுரம் – மலை, காடு, அரு, நெறி
சுரி – முகம், சங்கு
சுரிகை – சூர்க்கத்தி, கவணும்
சுருக்கம் – சங்கோசம்
சுருக்கல் – கட்டில்
சுருதி – வேதம், ஒவ்வி
சுரை – பசு, பசுவின் முலை, அம்புத்தலை,
கள், துணை, சுரைச்செடி
சுலவு – செம்பு
சுலவுதல் – சுழற்றி
சுலாவ – சுற்ற
சுலாவி – சுற்றி
சுலாவுகை – வியாபிக்கை, சுற்றுகையும்
சுலோகி – கள்
சுவடு – அடையாளம், ரசம்
சுவர் – அரண்
சுவாமி – முருகன், பொன்
சுழகு – சுளகு
சுழலை – வலை, கிருத்திரிமம்
சுழற்றி – கைவிசிறி
சுழியாறு – சுழியிலே ஆழ்த்துகை, அழுத்துகை
சுள்ளி – கொம்பு
சுளகு – முற்றும், முச்சில், ஸ்தானம்
சுளைப்பிடாம் – பசையிட்ட பச்சைவடம்
சுற்றம் – பந்து
சுற்றல் – எண்ணல்
சுற்றியும் சூழ்ந்தும் – போயும் வந்தும்
சுறா – மகாமீன்
சுனை – லஜ்ஜை, அபிமானம், பிரளயம்
சுனைக்கேடன் – லஜ்ஜாஹீனன்

## சூ

சூக்கை – முடிக்கை, ஆழ்கை,
ஆணையிடுகை
சூசை – யானை, சிகை
சூட்டு – நெற்றி, முகப்பு, மாலை
சூடகம் – சிரோபூஷணம், கைக்கட்டு, சரி
சூடிகை – மயிர்முடி, சுட்டி
சூடுகை – சுவீகரிக்கை
சூதகம் – மாமரம்
சூதம் – வண்டு
சூதன் – தேர்ப்பாகன், சூதையுடையவன்
சூது – உறுவது, தாமரை, விரகு,
விஜயஹேது, உசிதமானது
சூர்ப்பம் – சுளகு, முறம்
சூர்மகள் – வஞ்சப்பெண்
சூரல் – பிரம்பு
சூரன் – இரவி, தீ, நாய்
சூலப்பெண் – கர்ப்பிணிப் பெண்
சூலி – சிவன், காளியும்
சூலே – சூழ்தல், சினை
சூழ்கை – கள்ளு
சூழ்ச்சி – வியாப்தி, ஆபரணம், உபாயம்,
துக்கம், விரகு
சூழ்ந்து – ஆணையிட்டு
சூழ்தல் – திரளுதல், விரகு, ஆராய்தல்,
விசாரித்தல், எண்ணம்
சூழ்ப்பொதி – விசாரித்து
சூழல் – அவதாரம், மணற்குன்று,
வளைக்கை
சூழி – ஆனைமுகப்பட்டம், கடல், நீர்நிலை
மட்டம்
சூழுறவு – ஆணை
சூளி – உச்சி
சூளிகைச்சுட்டி – ஸ்தூபி
சூறன் – மூஞ்சூறு
சூறாவளி – சுழிக்காற்று
சூறி – வரிக்கோணி
சூன்றல் – தோண்டல்
சூனை – புல்லுவர்

**செக்கம் – ரணம், கோபம், சிவப்பு**

**செக்கர் – செவ்வானம், சிவப்பையுடைத்தானதும்**

**செகத்து – செத்து, போக்கி**

**செங்கீரையாடுகை – சாய்ந்தாடுகை**

**செங்கொடுகுட்டை – செங்கொடு – செவ்வையாகக் கொடுக்கை, குட்டை – நாழியரிசி**

செட்டி – வாணியன், முருகன்

செடி – பாபம், செடியும், அசிறு, சிக்கு

செண்டன் – செண்டையுடைத்தவன், தூதன்

செண்டு – கூர்மை, செண்டும்

செதகு – கூளம்

செதுக்கு – மந்தம், பூதம், சேறு

செதுகை – பதறு, கூனமும்

செதும்பு – சேறு

செந்தமிழ் – ஸ்வார்த்தபிரகாசமான தமிழ்

செந்தலிப்பு – சிவந்த தளிர், ஆனந்தம், சந்தோஷம்

செந்து – அவை, நிரயம்

செந்தோங்கு – செவ்விளநீர்

செந்நீர் – உதிரம்

செப்பம் – செவ்வை, அரணிமை

செப்பு – சந்தஸ், வயல், குற்றம், உயத்தி, பாத்ரம்

செப்பேடு – தாம்ரசாசனம்

செம் – திறம், கூறுபாடு, பிரகாரம்

செம்பல் – பழம், பூ, பெருமை, மழை

செம்பளிக்கை – மூடுகை

செம்பாடு – செம்மண்தரை

செம்பால் – ரத்தம், சிறப்பு

செம்பாலே – செம்பு நாழியாலே

செம்பு – பொன், தாமிரம், செல்வமும்

செம்புலம் – பாலைநிலம்

செம்மாப்பு – செவ்வை

செம்முகை – தாளிடுகை, பந்திக்கை

செம்மை – க்ஷேத்ரம், செவ்வை, சிவப்பு, அழகு, பெருமை, ருஜு

செய்கால் – விளைநிலம்

செய்தற்கரியது – தவசு

செய்யுளின்பம் – அவ்யயம், நிகண்டு சித்தம்

செய்யுட்பாடு – சந்தப்பூரணம்

செயலறுதியாலே – காரியம் வேறில்லாமையாலே

செரு – யுத்தம்

செருந்தி – சுரபுன்னை

செருநர் – யுத்தோன்முகர்

செல் – செல்ல, நடத்தவென்றபடி

செல்சாத்து – ஒன்றுக்கொன்று மேல்விழுகை

செல்லாமை – தரிக்கமாட்டாமை

செல்லு – மேகம்

செல்லுகை – போகை, குறைகை

செல்வம் – சம்பத்து

செலவு – சிறகு, செல்லுகை, போகை

செவ்வி – காந்தி, அழகு, தோழி

செவ்வியது – அழகு

செவிசீப்பாய் – ஆதரித்து

செவிப்பறை – பறைகை

செவிப்பறைபறைந்து ஜபிக்கை – ஏகாந்தமாக ஜபிக்கை

செவியேற்றாலே – செவியாலே கேழ்க்கையாலே

செவிலி – வளர்த்துக்கொண்ட தாய், தோழியும்

செழுகி – சிணுங்கி

செழுமை – வளம், மிகுதி, அழகு, பெருமை, கொழிப்பு, வெண்மை

செற்றம் – சிதறுதல், தோஷம், அசூயை

செற்றல் – கேடு, ஈமுட்டையும்

செற்று – யுத்தம்

செறி – அடக்கம்

செறிகை – கிட்டுகை, நெருங்குகை
செறிப்பு – சீர்மை, சிறுமை
செறு – விளைநிலம்
செறுந்தி – விருக்ஷ விசேஷம்
சென்றற்றது – சென்று முடிந்தது
சென்று – வந்து, குறித்து, கிட்டி,
வற்றிப்போகையும், குறுகி
சென்னியர் – பாணர், கூத்தர்

## சே

சே – விருஷபம், தூரம், சிவப்பு, குற்றமும்
சேட்டை – தவ்வை
சேடர்கள் – முன்னோர், தொழில்
செய்வோர்
சேடம் – சேஷம்
சேடு – திரட்சி, தளிர், பரிமளம், இளமை,
பு பம்
சேண் – உயர்த்தி
சேதனர் – அறிவுடையார்
சேமஞ்சாற்றி – சேமஞ்செய்து
சேய் – பிள்ளை, ருத்ரன், சிவப்பு, அழகு
சேய்த்து – தூரியது, தூரமும்
சேயம் – நடுநிலை, வீதி, நெஞ்சம், செப்பு
சேயரி – செவ்வரி, குற்றம்
சேயன் – தூரஸ்தன்
சேயுரியார் – பாணர்
சேர்க்கை – சேருகை
சேர்ப்பன் – நெய்தல் நிலத்துத் தலைமகன்,
துறைவனென்றும் பெயர்
சேரபாண்டியன் தம்பிரான் – சிம்மாசனம்
சேலப்பால் – குழம்புப்பால்
சேவடி – ஊணில்
சேவல் – நாய்
சேவலம் – கல்வி, சுவர்க்கம், செல்வம்
சேழ் – நெடுமை
சேறுகை – தரையைக் காலாலே
பிராண்டுகை

## சோ

சோணம் – சிவப்பு
சோணை – விடாதே பேயும் மழை
சோத்தம் – அஞ்சலி
சோத்தியம் – ஆக்ஷேபம்
சோதி – சுடர், அருக்கனும், திருமேனி,
காந்தி, ஸ்வாதீ நட்சத்திரம்
சோம்பர் – தமோகுண நிட்டர்
சோர்ந்து – தளர்ந்து
சோர்வு – தப்பு, காணாமல் வைத்தல்,
களவு, பிரிவு, மோகம்
சோருகை – அபகரிக்கை
சோளேந்திர சிங்கன் – பெரிய பெருமாள்
பட்டத்தானைக்(
பெயர்
சோற்று – சௌர்யம்
சோறுதல் – சுவறுதல், கொட்டிப்போகை,
சங்கோசம், முடிதல்

## த

தக்கன் – தக்ஷன்
தக்கை – பலவகைப்பறை
தகத்துகை – நெருக்குகை
தகமை – சுபாவம்
தகர்த்துகை – நோவு படுத்துகை
தகர் – ஆடு, இடம், பூமி
தகர – சிதலமாக
தகருகை – நெருக்கை
தகவு – கூடை, பொறை, கிருபை
தகன் – தழும்பு
தகனேறுகை – தழும்பேறுகை
தகுதி – புரை, ஆச்சாரம்
தகை – அளவு, அழகு, பிரகாரம், இயல்வு,
விஷயம், ஞானம்
தகைத்தல் – செறிதல்
தங்குகை – இருக்கை
தஞ்சம் – உறுதுணை, பெருமை, எளிமை,
நிச்சயம்

தட்டுகை – கட்டுகை
தட்டுளுப்பு – தடுமாற்றம்
தட்டொளி – கண்ணாடி
தட்பம் – குளிர்ச்சி
தடம் – பெருமை, தடாகம், கயம்,
சமுத்திரம், சுற்றுடைமை, கரை,
குளிர்ச்சியும்
தடவந்த – தடவின
தடஸ்தம் – பகிரங்கம்
தடிக்கூறு – கோலாலே யளந்து பாகமாகப்
பிரிக்கை
தடிக்கை – பூரிக்கை, கனக்கை
தடிகை – ஹிம்சிக்கை
தடியர் – கதை, கதாவாணிகளும்
தடியார் – தடி, முத்கரமும்
தடையோடே முடிந்தேனோ? – இராவணனைத்
தடுக்கப்போய்முடிந்தேனோ?
தண் – குளிர்ச்சி, தண்ணியது, தாழ்கை
தண்டகை – தண்டகாரண்யம்
தண்டம் – ஊன்றுகோல், குடைக்காம்பும்
தண்டல் – சேனை, ஆயுதபேதம்
தண்டு – சிவிகை, தண்டம்
தண்டெரியல் – மாலை
தண்டை – காவல், வால்
தண்ணம் – ஒருதலைப் பறை
தண்ணியன் – நிக்ரு டன்
தண்ணீர் – ஜீவனம்
தண்ணீர்த்துரும்பு – பிரதிஹதி
தண்மை – தட்பம், குளிர்ச்சி, தாழ்ச்சி
தணம் – பரண்
தணிக்கை – சமிக்கை
தணிகை – நசிக்கை
தணிசு – கடன்
தணிவில் – ஒய்வில்லாதே
தணிவிலர் – பூர்த்தியிலாதவர்
தணிவு – தணிகை, ஆவது போது
மென்றிருக்கை, மெத்தென்கை,
பூர்த்தி

தத்கிருத்ருநியாயம் – சங்கல்பத்தின் படியே
தத்துகை – கட்டுப்பகை
தத்துவம் – ஸ்வரூபம், உண்மையும்,
சத்தியம், தத்வம்
தத்துவன் – மெய்யன்
தத்துறுகை – தட்டுப்படுகை, கிட்டுகை
தத்தெளிகை – தன்னைத் தெளிகை
தத்தேத்தி – தன்னைத் தெளிந்து, தானே
தேறி
ததற்பு – உண்மை, சுபாவம், நெருக்கம்
ததி – தயிர்
தந்து – கால்
தம்பம் – கவசம், ஸ்தம்பம்
தம்மனை – தாய்
தமர் – ஞாதிகள்
தமலி – சட்டுவம்
தமனகம் – மருக்கொழுந்து, தவனம்
தமனியம் – பொன், தபநீயம்
தமியன் – தனியேன்
தமிழ் – இனிமை, நீர்மை, தமிழும்
தயங்க – விளங்க
தயங்குகை – ஒளிவிடுகை, அசைக்கை
தயலுண்கை – பிணிப்புண்கை
தரங்கல் – அலை, முத்து
தரணி – மலை, பூமி, இரவி
தரம் – ஆதிக்யம், தரணம்
தரவு – செல்லுஞ்சீட்டு
தரளம் – முத்து
தரிஞ்சம் – அன்றில்
தரு – கல்பக தரு
தருக்கு – விளையாட்டு, கர்வம், தர்க்கம்
தருமம் – தர்மம், உலகர் வழக்கம், கருமம்,
தவம்
தருமராசன் – அருக்கன், தர்மன், புதன்
தருமை – மிகுதி, மேன்மை
தல்லீ – தாய்
தலை – சிலாக்யம்
தலைக்கட்டு – கிரியை

தலைக்கட்டுகை – நிறைவேறுகை
தலைச்சாவி வெட்டுகை – எழுச்சியறுக்கை
தலைசிறக்கை – மிகவும் சிலாக்யம்
தலைசீக்கை – சிரக்கம்பம்
தலைத்தலை – மிகமிக மேன்மேலே
தலை தடுமாறு – சிரக்கம்பம்
தலை நீர்ப்பாடு – முதல்மடை
தலைப்பறை – முன்னே கொட்டுகிற வாத்யம்
தலைப்பாடு – தலைப்படுகை
தலைப்பெய்கை – தலையோடு தலை கூட்டுகை
தலைமை – நைட்யம்
தலையடிப்பு – சிலாக்கியம்
தலையிற்கை – அஞ்சலி, தினச்சம்பளம்
தலைவலித்தான் – பெரியான்
தவதவநாள் – தௌதநாள், பளபள என்கிறாப் போலே
தவநாறுகை – தபோகந்தியாயிருக்கை
தவம் – மிகுதி, குறைதலும், புண்யம், தவசு
தவர் – வில்லு
தவளம் – வெளுப்பு, அத்தாலே சுத்தியோகத்தைச் சொல்லுகிறது
தவாவினை – மலை, முக்தி
தவிசு – மெத்தை, ஆசனம், தடுக்கு
தவிவு – விச்சேதம், நாசம்
தவுதல் – கேடும், சார்வும்
தழல் – அக்னி
தழிகி – அரைநூல்மாலை, அரைவடம்
தழை – கருமை, பெருமை, பிச்சம், பீலி, குஞ்சரம், தொங்கல், காபாலம்
தள்ளுதல் – தளும்புதல்
தளம் – ஸ்தானம், தரணி, சாந்து, உப்பரிகை, ஆதாரம், ஆச்சரியம், நிலம், முல்லை, மாதுளம்
தளர்த்தி – இளைத்து
தளர்ந்தார் – இளைத்தார்
தளாடிக்காரர் – தலையாரி
தளிர் – துளிர்
தற்செய்ய – தான் செய்ததைச் செய்ய
தற்செலம் – வலிமை
தற்பறுகை – பலஹானி, பகையறிகை
தற்பு – சுபாவம், உண்மை, நெருக்கு
தறி – ஆனை கட்டுகிறதறிக்கால்
தறுகண்மை – பொறாமை
தன்பேறு – ஸ்வலாபம்
தன்மை – இயல்வு, சுபாவம்
தனக்கணக்கர் – தனம்போலே சீரியராயிருக்குமவர்
தனக்கேற – தன்மனதிற்குச் சரியாக
தனஞ்செயன் – அர்ஜுனன், காற்று, தீ
தனிமாலை – தீக்ஷை
தனிமுதல் – மூலப்பிரகிருதி, சர்வேஸ்வரன்
தனிவீரம் – அதீத சௌர்யம்
தனு – வில், உடல்

## தா

தா – தாவுகை
தாடு – வலி
தாணம் – உத்தரோத்தரம், அதிசயமான ஸ்வரம்
தாத்தி – ஆர்த்தி
தாதா – சப்தம்
தாதி – பரணி, அடிமை
தாது – கேசரம்
தாபதர் – தபஸ்விகள், சடைமுடியர்
தாமம் – ஒளி, இருப்பிடம், மாலை
தாய்தலை – பிரதானமான தலை, அறுதி
தார் – மாலை, பெருமை, கறுப்பு, தாரை, இதழ், ஒளி
தாரகை – நக்ஷத்திரம், பூமி
தாரா – பக்ஷி விசேஷம்
தாரி – வழி
தாலம் – கலம், பூமி, நாவு, பனை

தாலவட்டம் – யானையில்சேல்
தாலு – நாக்கு
தாவளம் – கிருகம், ஸ்தானம்
தாவு – வலி, வஞ்சனம், பகை, கேடு, தாண்டுதல்
தாழ்வர் – தாழ்வரை
தாழல் – இறைஞ்சுகை, குறைதல், தங்கல்
தாழி – கடல், தாழியும் தாளம் – சப்தம்
தாணு – மலை, தூண், நிலப்பொறுமை அளவு, பள்ளம், புலம்
தான் – ஸ்வரூபநிபேணம்
தான்தோன்றி – மூலமில்லாதவன், ஸ்வாதந்திரம்
தானம் – கொடுத்தல், சுவர்க்கம், சிவன், உரக்கக் கூப்பிடுகை, ஸ்தானம், கானம், நீராட்டு, ஸ்வரம்
தானை – பொருபடை, ஆயுதம், சேனை, தூசு

## தி

திக்கு – கதி
திக்குப்படுகை – நதியுண்டாகை
திகரி – திருவாழி
திகை – திசை, சுணங்கு
திகைக்கை – அடையாளம், சங்கேதம், மதி கலங்குகை
திசைக்கை – மோகிக்கை
திசைப்பு – திகைக்கை
திடம் – த்ருடம்
திடல் – ருஜீஷம்
திடை – உடல், மேடு, திண்ணை
திண்டி – யானை, பக்ஷணம்
திண்டிபம் – படகம்
திண்ணம் – பொய், மெய், பலம்
திண்மை – திண்ணிமை
தினுங்குகை – கட்டியாகை
தினும்பை – செறிவு, கொள்ளுகை
திதலை – சுணங்கு
திமிர்க்கை – அஞ்ஞானம்
திரண்பதி – வாழை
திரள் – சமுதாயமாக
திரளவும் – முழுதும்
திரிக்கை – இடவாய் வலவாய் ஏறுகை, சுழற்றுகை
திரிகை – மீறகை, ஏறிடுகை
திரிந்தாகிலும் – சஞ்சரியாய் நின்றாலும்
திரியட்டும் – திரும்பவும்
திரியவருக்கு – பயத்தினாலே மனது அடித்துக்கொள்கை
திதியிடாமை – திரும்பாமை
திரிவு – அழிவு
திரு – ஸ்ரீ, காந்தி, அழகு
திருச்சிற்றாறு – திருப்பதிக்கும் ஆற்றுக்கும் பெயர்
திருச்செங்குன்றூர் – ஊருக்குப் பெயர்
திருத்தம் – கட்டளைப்பாடு
திருத்தன் – திருப்தன்
திருத்தி – திருப்தி
திருநாராயணபுரத்தி வெறுப்பு – பிள்ளை திருநரையூரரயருடம் பையுபேக்ஷித்து
திருப்பள்ளியறை – சுவாமி சந்நிதி
திருமலர் – தாமரை
திருமாமகள் – லக்ஷ்மீ, ஐஸ்வர்யம்
திருமுகப்படி – எம்பெருமான் அருளிச்செய்தது
திருமுகம் – ராஜாக்ஞை
திருமுற்றம் – கோயில்
திருயிடுகை – தன்மேலேறிட்டுக் கொள்ளுகை
திருவடி – சுவாமி
திருவிளையாடுசூழல் – திருநந்தனவனம்
திருவோலக்கத்திற்படியே – திருவோலக்கத்திலே இருக்குமிடமறிந்துயிரா விட்டால் தள்ளி விடுவார்கள்

திரை – தொண்டமான், அலை, கடல், பூமி
திரையல் – வெற்றிலை
திரையுறி – பின்னலுறி
திரைவயிற்றுப்பேய் – கானல்
திவளுகை – விளங்குகை, பிடிக்கை, ஒளிவிடுகை, அசைகை
திளை – நெருக்கம்
திளைக்கை – களிக்கை
திளைக்கை – திகைக்கை
திறம் – கூறுபாடு, கிட்டுகை, இடையாட்டம், வியாபாரம்
திறம்பேல் – தப்பாதே
திறல் – மிடுக்கு
திறவியது – ஒன்றாலுமழியப்படாதது
திறுமாத்ரம் – ஒரு பிரதேசம்
திறை – கொள்ளுகை, தனக்காக்குகை
தின்னலுருதியேல் – சாப்பாடு, கையிலேயுற்றிருந்தாயாகில்
தினை – சிறுமை, அல்பம்

## தீ

தீ – தீங்கு, தேஜஸ், நிரயம்
தீக்கரை – முருக்கு
தீத்து – புஜிப்பித்து
தீது – பண்ணினபாவம், புத்தி பூர்வமாக
தீப்பப்பூண்டு – நச்சுப்பூண்டு
தீம் – இனிமை
தீம்பர் – கீழ்மக்கள்
தீம்பு – விஷமம், துர்ஜனம்
தீர் – தித்திப்பு
தீர்த்தம் – விழா, நீர், அருக்கன், அரசன்
தீர்த்தத்தினன்றே திருமுளைச்சாற்று – தீர்த்த வாரியினன்றே துவஜா ரோகணம்
தீர்த்தம் பிரசாதிக்கை – ஆவது சமாப்தியென்றபடி
தீவாய் – அனலாஸ்யன்
தீவு – இடைக்குறை

## து

துகள் – தூளி, சோறாக்குகிற பானை, குற்றம், புழுதி
துகிர் – பவளம்
துகில் – வஸ்திரம்
துகைக்கை – மதிக்கை
துங்கம் – உயர்ச்சி
துடர் – சரப்பளி, விலங்கு, ஈயமுருக்கிற ஓடு, உட்ணசம்பந்தம்
துடர்ச்சி – செறிவு
துடவை – வெண்ணிலம், உழவு
துடி – இடக்கை, வாத்யம், வலக்கையும்
துடிப்பு – அதிகம்
துடை – மாலை, சந்தர்ப்பம்
துடைகொள்ள – அறிய
துண்டம் – முறி, முண்டம்
துண்டர் – கொடி, சரப்பளி, துடருகை, விலங்கு, பூங்கொத்து
துணரி – பூங்கொத்து, மலர்ந்தது, தாழ்த்தல், பிரியல்
துணி – துக்கம்
துணிகை – அத்யவசிக்கை
துணிதல் – தெளிதல்
துணுக்கம் – பயம்
துணுக்கென்று – பயப்பட்டு, தவறு
துணை – ஒப்பு, நாள், ஆயுசு
துணைவன் – தோழன், மந்திரி
துதம் – சேதாத்ரம்
துதைக்கை – துகைக்கை, மாய்கை, மிதிக்கை
துதைத்தல் – நெருங்குதல்
துந்தி – உந்தியென்று திருநாபிக்குப் பெயர்
துப்பகம் – நெய்
துப்பம் – நெய்
துப்பரவு – சாமர்த்யம், வேண்டப்பாடும்
துப்பு – மிடுக்கு, துணை, சாமர்த்தியம்

தும்பி – வண்டு, திவலை, கணம்
தும்பிமணி – சிலாக்கியமான மணி
துமுலம் – சப்தம், துடருகை, கிட்டுகை
துயக்கு – மனத்திரிவு, சம்சயம்
துயர் – துக்கம், பாபம்
துயில் – உறக்கம், வஸ்திரம்
துரக்கை – ஒட்டுகை
துரங்கம் – குதிரை, மரக்கலம்
துரத்தல் – ஒட்டுதல்
துரால் – பொச்சை, அவசரம், ருஜீஷம்
துரிசன் – கள்வன்
துரிசு – தோஷம், ஹேயவிசேஷம், ஸ்பர்சம்
துருதுருக்கை – பரபரக்கை
துரும்பெழுந்தாடுகை – அசேதனங்கூட எழுந்தாடும்படியான வடிவு, விகாரத்தை அடைகை
துருவி – தேடி
துருவுகை – ரந்திர முண்டாக்குகை
துருவை – ஆடு
துலவி – நாசம்
துலுக்க – அசைக்க
துலை – ஒப்பு, எதிர், நிறுக்கை
துலைகை – மாறாகை, நசிக்கை
துலைகொண்டு – சரியாகக் கொண்டு
துலைநிலை – மாறுதட்டுமாறுகிறது
துலைய – நடுங்க
துலைவன் கிலேசப்படுபவன்
துவக்கு – சங்கம், சம்பந்தம்
துவக்குகை – வசீகரிக்கை
துவக்குண்கை – ஆடுகை
துவர்ச்சி – உலர்த்தி
துவர்தல் – ஆடுதல்
துவரி – இலவின் பூ
துவருகை – உலர்ந்துபோகை, தேறுகை
துவறு – சீற்றம்
துவஜம் – துகில்கொடி
துளக்கம் – நடுக்கம், சங்கோசம்
துளங்குகை – பயப்படுகை, நடுங்குகை
துளம் – மாதுளம், பீலிக்காம்பும்
துற்றி – பொறி, புள்ளி, மணம்
துற்றுகை – புஜிக்கை
துறவி – துறக்கை, விடுகை
துறுக்கு – சுனையண்டையிலவு
துறுப்பகத்தூடு – தூற்றாப்பொலி
துறப்புக்கூடு – தூற்றாராகி
துன்மை – தைக்கை
துன்னு – முதுகு
துன்னுகை – நெருங்குகை, மின்னுகை

## தூ

தூ – தூய்மை
தூக்கு – தொங்கல், கனம், நிறுத்தல், தூக்கணாங்குருவி, ஆச்சார்யன்
தூசித்தலை – எல்லைக்கோல்
தூசு – பஞ்சு
தூட்டி – உடைமை
தூண்டி – சொல்லுகை
தூதி – அன்னத்தின் இறகு, தூவி
தூம்பு – மரக்கால், வேய், மூழை, துளை
தூய்மை – சுற்றம், மேன்மை, அழுக்கறுதி
தூர்த்தல் – போக்கல்
தூரிசு – கள்ளன், தூரம்
தூவி – சிறகு
தூவு – தூய்மை, பற்றுக்கோடு, வேம்பு, பகை, தசை, புள்ளிறகும்
தூவுகை – தானம் பண்ணுகை
தூளி – புழுதி, சுண்ணம், குதிரை, அரப்பு
தூளிபம் – நல்லாடை, ஈயம், எழுதிடுகோல், முரசு, விட்டம், எருது, வாச்சியம், எறிபடை, தூரவிசாரத்தையுடையவர்கள்
தூற்றுகை – பழிசொல்லுகை

## தெ

தெக்காநெறி – தென்புலத்திற்குப் போகிற வழி
தெக்கு – வெறுப்பு, கழுகு
தெகுசெல் – அறிவீனம்
தெகுடாடுகை – அலமருகை
தெங்கன் – நிலை
தெட்டப்பழம் – பக்குவமான பழம்
தெட்டல் – முற்றல்
தெட்டி – பக்குவம், பெருமை, நெருக்கம், யானை, செட்டி
தெத்திக்கிடக்கை – நெருங்கிக்கிடக்கை
தெப்பு – தேசல்
தெய்யில் – சேறு
தெய்வம் – நறுநாற்றம், திவ்யம்
தெரிகை – தோய்ந்துபோகை
தெரிசொல் – சக்தி
தெரிமா – சிம்மம்
தெரியுறுதல் – ஆராய்தல்
தெருடன் – தேரப்படுமது
தெருள் – ஞானம்
தெருளுதல் – தேரப்படுமது
தெவ்வம் – சத்ருசமூகம்
தெவ்வர் – சத்ருக்கள்
தெழிகுரல் – கம்பீரமான குரல்
தெழித்து – ஆரவாரித்து, முழங்கி, கற்பித்து
தெழிப்பு – கர்வம், ஆரவாரம், முழங்கல்
தெழுக்கு – முழங்கை
தெள்ளுதல் – தெளிவு, கொழித்தல்
தெறக்கை – தொடுக்கை
தெறிக்கை – கிரியை
தெறிசி – குதிரை
தெறிவில்லு – உண்டைவில்லு
தெறுக்கால் – தேன்
தென்தமிழன் – தென்தேசத்து அரசன்
தென்றி – சிதறி
தென்னன் – பிரயாணன், தெற்கு ராஜா
தென்னுரை – தமிழ்

## தே

தே – தேன்
தேக்கம் – பயம், தடை
தேங்க – விசாரிக்க
தேங்குகை – ஏங்குகை, பயப்படுகை
தேசம் – தேஜஸ்
தேசி – நாய், குடியிருப்பு
தேசிகர் – ஞாதாக்கள்
தேசிகன் – குரு, நிலவரி, தேசாந்தரி
தேசு – மதிப்பு, தேஜஸ்
தேட்டம் – அபேக்ஷிதம், வேண்டினவர்கள்
தேம் – தேன், நாற்றம், பூசம், தித்திப்பு
தேம்பல் – மெலிவு
தேம்புகை – குறைகை
தேமல் –சுணங்கு
தேய் – தீ
தேய்வை – செறிகுழல்
தேர்க்கால் – வண்டி, சக்கரம்
தேருகை – தெளிகை, தேருகை
தேவர் – தீப்யமானவராயிருக்கை
தேவருகை – தடவுகை
தேவாரம் – திருவாராதனம், கிருகார்ச்சை
தேவுளல் – சிறைதல்
தேவை – கார்யம், விதி, தண்டம், வருத்தப் அடிமை
தேற்றன் – தெள்ளியவன்
தேற்றேகாரம் – அவதாரணம்
தேறல் – தேன், தெளிவு
தேறாதவண்ணம் – விஸ்வஸியாதபடி
தேறுதல் – தெளிதல், விஸ்வசித்தல், தரித்தல்,ஜீவிக்கை
தேன் – தெளிவு, இசை, வனப்பு, கற்பு, தெற்கு, கட்டளைப்பாடு, வண்டு, கள், குளிர்ச்சி

## தை

தையல் – ஸ்திரீ
தையலார் – ஸ்திரீகள்

## தொ

தொக்க – திரண்ட, நெருங்கின
தொக்கம் – திரள், நெருக்கம்
தொகுக்கை – சேர்க்கை
தொகை – நிரூபகம், சங்கியாபூரணம்
தொங்கல் – திருவபிசேகத்திற்கு மேலே சாற்றும் வளையும் மாலையும்
தொட்டல் – முண்டல், கைதீண்டல்
தொட – அடிக்க
தொடப்பு – உழவு, வளைவு
தொடம் – குற்றம்
தொடர் – அலகு, கொடியும், உறவு, விலங்கு
தொடர்ச்சி – செறிவு
தொடல் – கடல்
தொடவை – விளை நிலம்
தொடி – முன்கையிற்சரி, வளை, முன்கைவளை
தொடு – களவு, ஆழம், தோண்டப்பட்டது
தொடுவு – களவு
தொடை – மாலை, சம்பந்தம், சம்சயம்
தொடைக்கை – சம்சரிக்கை
தொடைகொள்ளுகை – தோன்றுகை, நிறுக்கை
தொண்டர் – உபாசகர், சீர்த்தொண்டர், அனந்தப்பிரயோஜநர்
தொண்டை – கோவை, கழுத்து, யானைத்துதிக்கை
தொத்து – சம்பந்தம், பூங்கொத்து, மாலை, சம்பந்தம்
தொய்யில் – தொய்ந்திருக்கை, சேறு, ஒரு புல், அழகு
தொல் – பழையது
தொல்லை – பெருமை, பழையது
தொழில் – பெருமை, களவு
தொழுகை – கும்பிடுகை
தொழுத்தை – தொண்டர், தாசரும், வெள்ளாட்டி
தொழுத்தையோம் – அடிச்சியோம்
தொழுதி – தூள், துக்கம்
தொழுதை – ஆரவாரம்
தொழும்பர் – நீசர், தாசபூதர்
தொழுவு – ஆழம், வளவு
தொளங்க – துக்கம்
தொளி – சேறு
தொறு – பசு, இடையரும்
தொறுமை – அடிமை, பசுவின்குழாம்
தொறுவர் – இடையர்
தொறுவை – பசுவின் குழாம்
தொன்மை – பழையது, பெருமை
தொன்மைக்கேடு – சுபாவக்கேடு

## தோ

தோடகம் – தாமரை
தோடு – ஆரவாரம், பெருமை
தோண்டல் – ஊற்று
தோய்தல் – ஆராய்தல்
தோய்வு – சம்பந்தம்
தோர்வி – தோர்க்கை
தோல் – துருத்தி, யானை, இலவு
தோலாது – தோராது
தோவன் – தண்ணியன்
தோழி – பாங்கி
தோள்படிகொள்ளுகை – சுமையைத் தூக்குகிறவன் சுமையைத் தோளிலே படிய வைத்துக் கொள்ளுகை
தோள்மாறுகை – ஒருதோளிலும் மற்றைத்தோளிலும் மாறுகை

தோளாமணி – துளையாதமணி
தோற்புர – மேலெழ
தோற்றத்திலே – முதலிலே
தோற்றம் – அழகு, வலி, கானல், விளக்கம், ரூபம்
தோற்றரவு – ஆரம்பம்
தோற்றல் – பிறப்பு, தோன்றல், வலி, தோகை, மயில், தொங்கல்
தோற்றி – முதலாக
தோன்றல் – பிள்ளை, சத்துருக்கள், அழகு, சுவாமி, நாயகன்,
முல்லைத்
தலைவன், புத்திரன்
தோன்றி – செங்காந்தன்
தோன்றிகர் – வாணியர்
தோன்றுதல் – பிரகசித்தல்

## ந

நக்கரிக்கை – நகருகை
நக்கல் – நகை, தீண்டல்
நக்கன் – அருக்கன், ருத்ரன்
நக்குண்டார் நாவெழார் – அல்பமாய் அல்பமொருவன் கையிலே வாங்கியுண்டால் வாங்கியுண்டவர் ஒன்றுஞ்சொல்ல மாட்டார்
நகம் – மலை, மரம், உதிரம்
நகடு – வியாதி, சோபை, பேகணிப்பு, தேசல்
நகில் – முலை
நகு – சிரிப்பு
நகுகை – சிரிக்கை
நகுதல் – சிரித்தல், ஒழித்தல்
நகை – ஆலத்தி, இடைச்சி, மகிழ்வு, ஒளி, சிரிப்பு, பல்
நங்குரம் – சீனிக்கலப்பை
நங்கை – பூர்ணை
நச்சு – நஞ்சு
நச்சுப்பூண்டு – நஞ்சான பூண்டு
நச்சுவனை – நஞ்சையுடைத்தானவனை
நச்சுவார் – ஆசையுடையார்
நசை – ஆசை
நட்ட – பண்விசேஷம், பாஷை
நட்டம் – நடு
நட்பாக – சுபாவமாக
நட்பு – சிநேகம்
நடம் – நடனம், கூத்தும்
நடமாட்டம் – கூத்தாட்டம்
நடலை – நோய், கூத்தாடுவிக்கிற நோய், துக்கம், பொய், வஞ்சனை, நுடக்கம்
நடவை – வழி
நடு – மருங்கு, மத்யம்
நடுவிற்பெருங்குடி – கிராமணி
நடை – நடக்கை, பரிக்கை, கூத்து, செல்வம், ஒழுக்கம், வழி, சந்தஸ், சுபாவம்
நடைகொள்ளுகை – அவ்வியாபாரம்
நடைச்சக்கரவத்து – நடைக்கு விருதூதுகை
நண்ணுதல் – அணைதல்
நண்பகல் – உச்சிக்காலம்
நணுகை – கிட்டுகை
நதி – ஆறு, மா: லை
நந்தல் – ஆக்கம், கேடும்
நந்தனர் – இடையர்
நந்தி – சிவன், ரிஷபம்
நந்தினம் – சங்கம்
நந்து – நத்தை
நந்துகை – நசிக்கை
நந்தை – துக்கம்
நப்பிளிக்கை – சிரிக்கை
நம் – பிரசித்தி
நம்பி – பூர்ணன், மிடுக்கன், விரும்பி, மரியாதை

நம்புதல் – விரும்புதல்
நம்மன் – பூதங்கள்
நமஸ்காரமாமித்தனை – அவஸ்யமாமித்தனை
நமன்று – வணங்கி, சேவித்து
நமுக்கை – மிருதுவாகை, குழைகையும்
நமுக – உருக, குழைய, மிருதுவாக
நமுகை – உருக்குகை, குழைகை,
மிருதுவாகை
நனமகை – கிரிகிக்கை
நயக்கை – ஆசைப்படுகை
நயப்பிக்கை – நிர்வகிக்கை
நயம் – இன்பம், நியாயம், விருப்பம்,
சப்தாதி விஷயமும்
நயவேன் – ஆசைப்படேன்
நரகம் – யமன்தண்டல், சம்சாரம்,
அகலுகை
நரம்பு – நாடி, தந்திரி
நரலை – கடல்
நரை – ஜரை
நரைதிரை மாறுகை – நரை – ஜரை,
திரை – மாறுகை,
ஆவது, யௌவனத்தை
பஜிக்கையென்றபடி
நல்கல் – கொடுத்தல்
நல்குதல் கொடுத்தல், தருதலும்
நல்குதிரை – இறுமாந்திருக்கை
நல்வினை – சுகிர்தம்
நலங்குகை – முசுங்குகை
நலம் – பக்தி, யோக்யதை, சிநேகம், குணம்
நலிவு – நாசம்
நலுகல் – கொடுத்தல்
நவம் – கூற்று, புதுமை, பூமி, பாம்பு,
பழைமை, கேண்மை, தொண்டு,
கார்காலம்
நவியம் – கோடாலியும், மழுவும்
நவிலுகை – வளர்க்கை, நண்ணுகை,
கிருபை, சொல்லுகை,
பரிச்சயம்பண்ணுகை, பயிலுகை
நவின்று – சொல்வு
நள் – நடு, செறிவு, இருள், தேள்,
கொடுத்தல், சப்தானுகாரம்
நள்ளீ – பொன்னும், வாவியும்
நள்ளு – செறிவு
நள்ளுகை – கிட்டுகை, செறிகை
நள்ளேன் – கிட்டேன்
நள்ளை – செறிவு
நளிர் – குளிர், வெறிப்பு, பெருமை, செறிவ
நற்குரை – ஒத்தாரில்லாமை
நற்கேடு – சுபாவங்கெடுகை
நறு – வாணியம்
நறுகுமுறுகை – பொறாமை, சப்தானுகாரம்
நறுநாற்றம் – சுகந்தம்
நன்மை – யோக்யதை
நன்னுகு – மிகுதி
நன்னை – உபகாரம்
நனவு – தெளிவு, இயலுகை, நடத்துகை
நனி – சீற்றம், குளிர்ச்சியும்
நனுங்குகை – உத்யோகிக்கை
நனை – கள், மது, பூமொட்டும்

## நா

நா – நாக்கு
நாக்குவளைக்கை – தூஷிக்கை
நாகப்பூ – நாககேசரம்
நாகம் – சுவர்க்கம், ஆகாசம், அனந்தன்,
நாகமும், சுரபுன்னை, நாகபு பம்
நாச்சொல்லு – விநோதம்
நாஞ்சல் – கலப்பை
நாட்டம் – வாள், கண், திருட்டி, ஆடல்
நாட்டுதல் – ஸ்தாபித்தல்
நாட்பூ – அப்போதைப்பூ
நாட – ஆஸ்ரயிக்க
நாடல் – தேடல்
நாடுகை – தேடுகை
நாடோடி – நாட்டிலேயுண்டாயிருக்கை
நாண் – சுவடி, அபிமானித்திருக்கை

நாணம் – லஜ்ஜா
நாணி – துர்க்கை
நாத்துகை – உபதேசம்
நாத்தூண் – நாத்தனார்
நாமங்கை – சரஸ்வதி
நாமம் – பெருமை, நாமமும்
நாயகப்பத்தி – நடுப்பத்தி
நாயகம் – நடு, நாயகக்கல்
நாயடியிட்டாப்போலே – மிருதுவாக
நாயன் – பர்த்தா, ஸ்வாமி
நாராயணகோவலர் – யாதவர்கள்
நாலத்தடம் – நாலாய்ச் சுற்றுடைத்தாயிருக்கை
நாலவம் – பேரெண்
நாலி – மடை, முத்து, விலங்கின் நடுவிற் சங்கிலி
நாவல் – நாவலென்றும் அறையென்றும் ஜெயித்தவன் சொல்லும் வார்த்தை
நாவலர்கள் – வாக்மிகள்
நாவி – கந்தம், கர்வம்
நாழ் – நறுவடமணித்தனம், பொய்
நாழல் – மகாதவி
நாள் – தூய்மை, நட்சத்திரம், ஆயுசு
நாளம் – மஞ்சள், நறுநாற்றம், ஒடுக்கம்
நாளி – நாய்
நாளியர் – பெண்பெயர்
நாற்றின – தொங்கவிட்ட
நான் – அபிமானம்
நான்மாடக்கூடம் – வித்வான்கள் திரளும் தேசம், மதுரை
நான்று – நாள்
நானகம் – குதிரை
நானம் – மணம், கவரி, நீர், பூச்சம், பிச்சி, கருமுகை, பரிமளம்
நானமர் – முத்து, நாவி

## நி

நிக்குதி – தோற்றரவு, சந்நிவேசம்
நிகர் – ஒப்பு
நிகழ்தல் – சஞ்சரிக்கை
நிச்சல் – நித்தியம்
நிசாசரர் – இராக்கதர்
நிசிதம் – கூர்மை
நிணம் – மாம்சம்
நித்தலம் – முத்து
நித்யமாக – நிரவம்யமாக
நிபந்தனம் – ஹேது, சம்பந்தம்
நியாயம் – சமம், பிரகாரம்
நிர்விடியகிரமம் – விஷயமில்லாதேயிருக்க விடியமென்று கிரகிக்கை
நிரந்தரவர் – சத்ருக்கள்
நிருமிரத்தல் – நிரூபித்தல்
நிரை – சமூகம், காலத்திரள்
நிலப்பண்பு – நிலஸ்வாபம்
நிலம் – பூமி, தனம்
நிலமை – ஸ்திதி, ஸ்வபாவம்
நிலவர் – நாதாக்கள்
நிலா – சஞ்சரிக்கை, கலை
நிலை – நிட்டை, துணிவு, ஸ்வபாவம்
நிலைக்குத்துகை – இந்த ஸ்தானத்தையறிகை
நிலைமிதி – நல்ல ஸ்வபாவம்
நிவா – வெள்ளாறு
நிழலுகை – நிறங்கொடுக்கை
நிறம் – பண், மேனி, வடிவு, ஸ்வரம், மர்மம், முறை, காந்தி, பிரகாசம்
நிறம் பெறுகை – அதிசயம் பெறுகை
நிறமைபூ – நிறமறிய
நிறவு – அடக்கம், பூர்த்தி
நிறை – பூர்த்தி, நிறைவு, மிகுதி, அடக்கம், சீர்மை
நின் – தகுதி
நினை – எழுங்கு
நினையார் – நினைக்கிறவர்கள்

## நீ

நீச்சு நீர் – தரிக்கப்போகாமை
நீச்செழும்பு – பாசிபூக்கை
நீசர் – அறிவிலோர்
நீத்தல் – கடத்தல், விடுதல்
நீத்து – நீக்கிவிட்டு
நீதி – வழி, நடப்பு, ஒழுக்கம், ஆச்சாரம்
நீதிவானம் – பரமபதம்
நீர் – நீர்மை, ஸ்வபாவம், விஷம், ஜலம்
நீர்க்கண்டன் – நீலகண்டன்
நீர்க்களிப்பு – சைத்யம்
நீர்மை – கூவை
நீராடி – ருத்ரன்
நீராம்படி – உருகும்படி
நீருக்கப்பள்ள நாவியான் – நீர்வாயும் படியான பள்ளமடை
நீறன் – ருத்ரன்

## நு

நுகர்தல் – பருகல், உண்டலும்
நுடங்க – மயங்க, பயம், பூரிப்பு
நுண்மை – சூச்சுமதா, வைலக்ஷண்யம்
நுணியாடி – நாசீரபடன்
நுணுக்கம் – சூச்சுமம்
நுதல் – நெற்றி
நுதலி – கருதி, உண்டாக்கி, சங்கல்பத்து
நுதி – கூர்மை, நுனி
நுவலுதல் – சொல்லுதல்
நுளம்பு – ஒரு கொக்கு விசேஷம்
நுன்னுமிட்டார் – உங்களுக்கிட்ட மானவர்கள்,
நுன்னும் – உங்களுக்கு,
இட்டர் – இட்டமானவர்கள்
நுனியட்டம் – சாபல்யம்
நூக்குகை – தள்ளுகை

## நூ

நூல் – நூல், சாஸ்திரம், நூலென்று நூலாய் அத்தாலே சூச்சுமத் தைச் சொல்லித்து, அல்பமென்றபடி
நூற்று – மந்திரித்து
நூறுதல் – நயித்தல்

## நெ

நெக்கு – நெகிழ்ந்து, சிதிலமாய்
நெஞ்சறவு – பிரணயகோபம்
நெஞ்சாறல் – துக்கம், விசாரம், மனக்கிலேசம்
நெருங்கை நீட்டாக – அதிதூரமாக
நெருமால் – சர்வாதிகன்
நெய்த்து – பளபளத்து
நெய்தல் – ஆம்பல், அல்லி, நெய்தலும்
நெய்மை – கூர்மை, மிகுதி
நெய்யாடல் – எண்ணை விளையாட்டு
நெய்யுண்ணி – நெய்யுண்ணும் சுபாவம்
நெருத்தம் – குண்டி
நெருநல் – நேற்று
நெளிகை – நிர்பந்தம், வணக்கம்
நெற்செய்யப்புற்றேயும் – நெல்லுப் பிணையடிக்கப் புல்லுத்தேயும்
நெற்பரிமாறுகை – நெல்லுத் தூற்றுகை
நெற்றி – எதிர்
நெற்றிக்கை – எல்லைக்கோல், முறத்தூறி
நெறி – ஒழுக்கம், மார்க்கம்
நென்மெலி – நெல்லிலே வைத்துத் தெறிப்பது, ஒரு படை வீட்டிற்குப் பெயர்
நென்னல் – நேற்று
நென்னேற்று – முதல் நாள்

## நே

நேசம் – கடைகயிறு
நேயம் – சினேகம், இனிமை
நேர் – ஒப்பு, வாய்ப்பு, நிறை, நேசம், மிகுதி, சூச்சுமம்
நேர்ந்த – எதிரிட்ட
நேர் நிற்கை – நேராக நிற்கை
நேர் படுகை – சொல்லப்படுகை
நேர்மை – வைலக்ஷண்யம்
நேரான – யதார்த்தமான
நேரிய காதல் – சூச்சுமமான அன்பு
நேருகை – சூச்சுமம், கிட்டுகை, சம்ஹரிக்கை, தகுதி, தொழில்

## நை

நைகை – சிதிலமாகை
நையாயிகள் – சோடசபதார்த்தவாதிகள்
நைவளம் – கான விசேஷம், பண்
நைவிக்கை – தள்ளுகை

## நொ

நொக்கென – சீக்கிரமாக
நொடிதல் – சொல்லுதல்
நொய்ப்பம் – சூச்சுமம், சாமர்த்தியம்
நொய்ப்பு – நொய்மை, எளிசு
நொழுந்த – கோக்க, செருக

## நோ

நோக்குகை – ரக்ஷிக்கை, பார்க்கை
நோய் – வியாதி
நோய்ப்பம் – நோய்மை
நோவாது – சாதனானுட்டானம் பண்ணாதே
நோன்பியர் – ஆர்ஹதர்
நோன்பு – சாதனம்
நோன்மை – வலிமை

## ப

பக்குகை – சொல்லுகை, கூப்பிடுகை
பக்தம் – சோறு
பகட்டுகை – பிரமிப்பிக்கை
பகடு – புருஷயானை, பெருமை, மிடுக்கு
பகர் – ஒளி, காந்தி, கதிர், விளங்குதல்
பகர்க்கை – விளங்குகை, சஞ்சரிக்கை
பகருகை – சொல்லுகை
பகல்வன் – ஆதித்யன், சூரியன், பகலோன்
பகவர் – சன்னியாசி, குணநிட்டர்
பகழி – கூரியவாயம்பு, அம்படி
பகுவாய் – காளவாய்
பங்கி – மயிர்
பச்சைப்பசுந்தேவர் – கலப்பற்ற பரமதேவதை
பச்சைப்படாம் – பச்சைப்புடைவை
பசலை – வைவர்ண்யம்
பசிக்கிராகம் – கோபம். கிராகம்
பசுங்கூட்டு – நவீன சம்யோகம், அவயவசோபை, சந்தன, குங்கும , கற்பூரக் கூட்டு, பசுமையிலே கூட்டின கூட்டு
பசுந்துவல் – வைவர்ண்யம்
பசுமை – செவ்வி
பசை – கோது, பச்சை
பஞ்சசயனம் – அழகு, பரிமளம், குளிர்ச்சி, இவைகளையுடைய படுக்கை
பஞ்சவன் – பாண்டியன்
பஞ்சுக்கொட்டான் வாசல் – சந்திர புட்கரணிக்குக் கிழக்காக, ஆர்யபடர்கள்வாயில்
பட்டங்கட்ட – அபிஷேகம் பண்ண
பட்டம் – லலாடபூஷணம்
பட்டன் – பண்டிதன்
பட்டைப்பொதிசோறு – கமுகம்பட்டையிலே கட்டினசோறு

படப்பை – நீர்நிலம்
படலிகை – பூங்குடலை
படளம் – திரளம்
படாதல் – பரவுதல், பரம்புதலும்
படி – பூமி
படிகை – படிந்திருக்கை
படிமா – உவமானம்
படியாணி – உறையாணி
படுகாடு – கட்டிவிழுந்த காடு
படுகொலை – கோரபீடை, ஹிம்சை,
குலையிலேபட்டுவிழும்படி
சொல்லுகை
படுதல் – தோன்றல், உண்டாகுதல்
படுபாடர் – கிருஹீதகிராஹிகள்
படை – கலப்படை, படைச்சால்
படைக்குறி – சேனாநிரூபணம்
பண் – சுவரம், காளபிசேஷம், கை, அழகு,
சௌலப்யம் வார்த்தை, கோடு,
அணி
பண்டம் – பதார்த்தம், தனம்
பண்ணி – கும்பு
பண்ணை – இடைச்சேரி, திரள்
பண்பு – இயல்வு, பிரகாரம், சுபாவம்,
நீர்மை, மேனி, கர்வம், குணம்,
சீர்மை
பண்மை – குளிர்ச்சி, பெருமை
பணி – சர்ப்பம், கைங்கர்யம், கார்யம்
பணிக்கை – சொல்லுகை
பணிக்கொட்டில் – பண்ணுகிறகொட்டில்
பணிகை – சேவிக்கை
பணித்தல் செய்யாதவர்கள் – நியமிக்க
மாட்டாதவர்கள்
பணிதல் – தாழ்தல், தொழுகை
பணியோந்திருக்கை – அதுவே
ஆசையாயிருக்கை
பணிமொழி – காரியச் சொல்லு
பணியாக – அனுபவயோக்யமாக
பணிலம் – சங்கம்
பணிவகை – சொன்னபிரகாரம்
பணிவு – தாழ்வு
பணை – வாத்யவிசேஷம், கிளை, முரசு,
நீர்நிலம், தெப்பம்
பணையம் – வட்டி
பத்தல் – குளிர்ச்சி, துளிர்த்தல்
பத்தை – பற்றாதவன்
பதஞ்செய்கை – பக்குவமாகை
பதண்பதண் – தவிக்கை
பதம் – சோறு, செவ்வி
பதரப்படாமை – தப்பாமை
பதவி – பதவி, அதிசயமும்
பதவிய – மிருதுவாய
பதி – ஊர், திருப்பதியும்
பதிகம் – பாதகம், கொடுமை
பதியம் – பத்யம்
பதினெட்டாம் பாஷை – அபூர்வமென்றபடி
பந்தம் – பிரதிக்ஞை, பந்து, பிரபந்தம்
பந்தர் – நுளையர், மீன்பள்ளியும்
பந்தனை – வருத்தம், பிள்ளைக்கு
வருமணுக்கம், பந்தனையும்
பந்தார் – சத்ருக்கள்
பயமை – பெருமை, குளிர்ச்சி
பயலை – வைவர்ண்யம்
பயன் – பலம்
பயிர்ப்பு – வைவர்ண்யம், ஒரு விஷயத்தைப்
பற்றினால் விடாதே
சிநேகித்திருக்கை
பயிலுகை – அப்யசிக்கை, நெருங்குகை,
வர்த்திக்கை
பயிற்றுகை – வர்த்திக்கை
பயிறுதல் – செறிதல்
பயின்று – கிட்டி
பர்வம் – அம்சம்
பரக்கழிக்கை – பழிவிளைக்கை
பரகு பரகு – பொறாமை
பரத்தல் – வைவர்ண்யம்
பரத்தை மாட்டு – அர்த்தார்ஜனம்

பரமன் – தனக்கு மேலில்லாதவன்
பரல் – பருக்கை
பரவல் – சொல்லல்
பரவுகை – சொல்லுகை, பரம்புதல்
பரவை – சமுத்திரம்
பராகர்த்தம் – வெளியிலிருக்கிற உபட படாதிகள்
பரி – பக்ஷபாதம், செருக்கு, செல்லுகை, போகையும், குதிரை
பரிகை – ஒருவனுக்குச்சகாயமாகை, ஸ்நேகமும்
பரிசல் – பிரத்யுபகாரம்
பரிசில் – பாரிதோஷிகம்
பரிசு – அழகு, பெருமை, ஒக்கம், பிரகாரம், அதலம், வரிசை
பரிசை – மதிள்
பரிஞை – ஊர்ப்பெயர்
பரிதி – சூரியன்
பரிமா – குதிரை
பரிமாற்றம் – அனுபவம், விசேஷம், ஆசாரம், நெற்களம்
பரிய – தடித்த
பரியட்டபண்பு – பரியட்ட உடை
பரிவு – மனப்பீடை, பரிவாய், வருத்தம்
பருகை – பானம் பண்ணுகை
பருங்குதல் – சொல்லுதல், நிரசிக்கை
பருப்பதம் – பர்வதம்
பருப்பு – மனோவ்யதை
பருவம் – வயசு
பல்கி – பருவாக, விஸ்தாரமும்
பல்லிபற்றுகை – பல்லியைப் போலப் பிடித்துக்கொள்ளுகை, தனித்தனி வியாபிக்கை
பல்லிலேபட்டுத்தெறிக்கை – அவதார சாமீப்யத்தைப் பற்றுகை
பலதேவர் – பலதேவர்
பலநிலம் – தளத்தின்மேல்தளம்
பலம் – மாம்சம்
பலி – பூஜை, பிக்ஷை
பலிசு – பந்தித்து
பவ்வம் – சமுத்திரம்
பவம் – சம்சாரம்
பவன் – உத்பத்திக்காலம்
பவளம் – வாயு
பவனான – உத்பவிக்கிற
பவுண்புரன் – பௌண்டரீகன்
பவுழியன் – சேரன்
பழங்கிணறு – தூர்வாருகை, ஆவது இத்தனை பிரயாசை வேணுமோ என்றவாறு
பழம்புணர்ப்பு – பழைய ஸ்தோத்திரம்
பழனம் – நீர்நிலம்
பழி – பாவம், ஏணிப்பணி
பள்ளி – படுக்கை, பள்ளிக்கூடமும், பாளையகாரர்
பள்ளிக்கலகம் – பள்ளிக்கலகத்திலாண்டவனை விஞ்சுமாப்போலே
பள்ளியந்துலாம் – தண்டிகை
பளிங்கு – தெளிவு
பற்கவ்வுகை – கோபத்தாலேயுதட்டைக் கவ்வுகை
பற்றாசு – ஹேது, அவலம்பம்
பற்றார் – பற்றாதார், சத்ருக்கள்
பற்று – துணை
பற்றுத்து – பற்றினது
பறை – வாத்யம்
பறைகை – சொல்லுகை, பறைந்து ஓடிப்போகை
பறைய – மாய, சொல்ல
பன்மை – பகுவசனம், பகுத்வம்
பன்னல் – நிரூபித்தல், சொல்
பன்னுதல் – ஆராய்தல், பரம்புதல்
பனி – குளிர்ச்சி, நடுக்கம், மழுங்கல், மழை, ஹிமம்
பனிப்படும் – வருத்தமுண்டாகும்
பனுவல் – நூல், சாஸ்திரம்
பனை – நீர்நிலம்
பனையம் – வட்டி

## பா

பா – பாபம், பதார்த்தம்

பாகன் – ரக்ஷகன், சாரதி, நிர்வாஹகன்

பாகு – பாகன், பாகன் செய்யுந் தொழில்

பாகுடம் – பச்சை உபஹாரம்

பாங்கல் – அட்டாலை

பாங்கி – தோழி

பாசடை – பச்சிலை

பாசம் – கயிறு, ஆசை, சங்கம், வலை, சிநேகம்

பாசனம் – பாத்ரம்

பாசுரம் – வாக்யம்

பாட்டம்பாட்டமாக – அடிக்கடி

பாடாற்ற – சகிக்க

பாடி – கிராமம்

பாடிகாப்பார் – தலையாரிகள்

பாடு – இடம், பக்கம், ஈடுபாடு, சமீபம், துக்கம், அஹோராத்ரம்

பாடுகாவல் – அருகு காவல்

பாடோட – ஒரு வாக்காக

பாண் – பாட்டு, பாணன்

பாணல் – நெய்தலிலே அவாந்தரம்

பாணன் – பாடுவான், திருக்குலத்தடியான்

பாணனார் – ஆசார்யன்

பாணி – தாளம், தொனி, வாத்யம்

பாணிச்சி – பாடவல்லாள்

பாத்தம் – சத்ருசம்

பாத்துகை – நசிப்பிக்கை

பாதுகாவல் – அந்தப்புரம்

பாந்தள் – பாம்பு

பாமை – ஸ்வபாவம்

பாய்கை – பிரிந்துபோகை, குதிக்கை

பாய்த்தல் – காய்த்தல்

பாய்தல் – உதைக்கை

பாயர் – விஸ்தாரம்

பாயல் – படுக்கை

பார் – நத்தம், விடியம், பூமி, இடம்

பார்க்கவன் – குலாவன், குசவன்

பாரிக்கை – பரப்புகை

பால் – இடம், பாகம், சுபாவம், சமீபம், பகுதி

பாலைநிலம் – ஹேயபூமி, மருபூமி

பாவி – பரம்பி

பாவை – மரப்பாவை, ஸ்திரீ, நோன்பு

பாழி – படுக்கை, இடமுடைமை, மிடுக்கு

பாறு – கழுகு, பருந்து

பான்மை – சாரம், சுபாவம்

பானு – சூரியன், கிரணம்

பாஷண்டம் – பாபஷண்டம்

பாக்ஷிகம் – பலித்தல்

## பி

பிச்சின – முசுங்கின

பிச்சு – பைத்தியம், வியாமோகம்

பிசல் – தோள், கழுத்தும்

பிசல்கள் – எறும்பு, பிடரி

பிஞ்ஞகன் – பினாகீ

பிடர் – தலை

பிடாம் – பச்சை வடம், கம்பளியும்

பிடார் – அகங்காரம்

பிடி – பொடி, அசோகம், பெட்டையானையும்

பிண்டம் – மூலப்பிரக்ருதி, காரணமும்

பிண்டி – அசோகம்

பிண்டியார் – பௌத்தர்

பிணக்கு – பிணங்குகை, விவாதம்

பிணி – வியாதி, துக்கம், கட்டும்

பிணிப்புண்கை – கட்டுண்கை, கட்டுப்படுகை

பிணை – மான்பேடை

பிணைந்த – கலந்த

பிதிர் – விலக்ஷணம்

பிதிருகை – காப்பிடுகை, ரக்ஷை

பியர்தருகை – பொய் சொல்லுகை

பியர்ந்தும் – பின்னையும்

பிரமாணித்தார் – விஸ்வசித்தார்
பிராயம் – வயது
பிரிகதிர்ப்படுகை – கதிர்ப்பிரிக்கை
பிரிநிலை – சாக்ஷி, ஒருவன் திருடினால் அவனுக்கும் புறத்திலேயாட் பார்த்துச் சகாயமாயிருக்கை
பிரியல் – ஊரிலே ரேகையிலே சிறிது பிரித்துக்கொடுக்கை
பிரிவு – பக்ஷவாதம், துக்கம்
பிலம்பன் – பிரலம்பாசுரன்
பிழக்கு – பிழை
பிழறுகை – விளங்குகை, மிகுதி, மிளிகுகையும்
பிழை – குற்றம், தப்பும்
பிழைக்கை – தப்புகை
பிள்ளை – கிருஷணன்
பிள்ளைகள் – வழக்குச் சொல்
பிள்ளைத்தனம் – பால்யம்
பிற்குழை – பின்னே வருகை
பிற்றைப்போது – பிற்பாடு
பிறங்கல் – மாலை, மிகுதி
பிறங்குகை – விளங்குகை, நெருங்குகை
பிறட்சி – மதமதப்பு
பிறப்பிலி – தான்தோன்றி
பிறவிப்பாசம் – ஜன்ம வாசனை, ஜாதி தர்மம்
பிறழ – மிளிர, மிக, விளங்க
பிறை – சந்திரன்
பிறைதொழும் காலம் – சந்திரதரிசன காலம்
பின்னரும் – பின்னையும்
பின்னாட்ட – அனுவர்த்திக்க
பின்னுகை – சதிர்க்கை
பின்னே தள்ளுகை – நிர்ப்பந்தம்
பின்னேயென்று – பூஜ்யம்
பினாறுகை – திறக்கை, கழிக்கை

## பீ

பீடு – பெருமை, அதிசயம்
பீர் – வைவர்ண்யம், அல்பம், பீர்க்கம் பூ
பீலிக்கண் – மயிற்றோகை
பீள்கன்று – கீழ்க்கன்று
பீளை – பீளைப் பூ

## பு

புகுவாய் – புகுகிற வாசலிலே
புக்கிலம் – இடம்
புகல் – சரீரம்
புகழ்க்கோல் – தராசுக்கோல்
புகாலிடம் – பாதகபதார்த்தத்தின் கையிலகப்படாமலிருக்கிறவிடம்
புகை – புகுகை, போகை
புகையிலுண்பார் – சோம்பர்
புஞ்சி – பஞ்சு
புடை – பக்கம், பிரகாரம், இடம், சுற்று, பரப்பு, அபகாரம்
புண் – மாம்சம்
புணர்தல் – கூடல், சம்ஸ்லேஷம்
புணர்ப்பு – பிரேரிக்கை, சம்பந்தம், சுபாவம், சிருட்டி, வெற்றிமாலை
புணர்வு – சேட்டிதம், சமுத்திரம்
புணை – தெப்பம்
புணைப்பள்ளி – மெத்தை
புத்தர் – ஆதித்யம், ஒப்பு
புத்தன் – புத்தன்
புத்து – பௌத்தர்
புத்தேளிர் – தேவதைகள்
புதஞ்செய்து – தாவி
புதல்வர் – புத்திரர்கள்
புதா – பெருநாரை
புதுக்கணிப்பு – நவீனகாந்தி
புதுக்கோமுற்றவர் – புதிய ராஜாக்கள்
புந்தி – மனது, வெளிநிலம்

புயக்காலம் – கார் காலம்
புயக்கு – வர்ஷா காலம், பசுமை, ஆகர்ஷம்
புயர்தல் – ஆகர்ஷம், போதல், இயற்றல்
புரத்தல் – காத்தல்
புரவி – குதிரை
புரவில் – பர்யந்தம், பூமரங்கள்
புராணர் – பழையவர்
புரி – வைலம்புரி, பின்னுகை
புரிகை – செய்யல், மீளுகை, அவிழ்க்கை
புரிசை – மதிள், பட்டணம்
புரிதல் – கொடுத்தல், வாங்கல், செய்தல், மீளுகை, மிகுதல்
புரிந்து – திரும்பி, ஆதரித்து
புரிநூல் – முப்புரிநூல்
புரிப்பிக்கை – திரும்பிப்பார்க்கை
புரிவுடைமை – ஆசை
புரை – ஒப்பு, சம்சயம், கிருகம், வழி, ரந்திரம், மித்யை
புரையற – ரந்திரமன்றிக்கே
புரைவாய் – இடம்
புல்குகை – ஊடுகை
புல்குவணை – தழுவுமணை
புல்லல் – புனைதல்
புல்லிமை – பொல்லாங்கு
புல்லிலை – மிருதுவான இலை
புலம்பு – புலப்படுகை, தனிமை, நடுக்கம்
புலமை – கானம்
புலரி – பூமி, லீலை, ஆனைத்தொழில்
புலருகை – உலருகை
புலவி – ஸ்திரீ, துக்கம்
புலன் – விஷயம், அழகு, இந்திரியம்
புலால் – ரக்தம், மத்ஸ்யம்
புலாவுகை – சந்திக்கை, பிரகாசிக்கை, வடிவு
புழை – சுழி, துணை, சாக்ஷி
புள்ளினம் – உபயவிபூதி
புளி – புழுகு
புற்கவ்வல் – விடாதேசவங்கல்
புறம் – முதுகு, பூங்கொத்து, மாலை. காணாதவிடம்
புறவில் – பர்யந்தம், ஊரைச் சூழ்ந்த சுடுகாடு, பூமரங்கள்
புறை – பொறாமை, பாரம்
புன்கண்மை – பேகணிப்பு, கண்கலக்கம்
புன்மை – துக்கம், பொல்லாங்கு
புன்னாவம் – பொய், கிருத்ருமம்
புனம் – நிலம்
புனைகை – சூடுகை, கட்டுகை, புனையப்படுகை, சாற்றப்படுகை
புனைதல் – தொகுத்தல், பந்தித்தல்

## பூ

பூ – பொழுத, காலம், பூமி
பூச்சி – பூவிலேயுண்டானவன்
பூசல் – கூப்பீடு, யுத்தம், சம்பந்தம்
பூண் – ஆபரணம்
பூணி – பசு
பூணிக்கை – பிரதிக்ஞை பண்ணுகை
பூத்தரு புணர்ச்சி – பூத்தரு புணர்ச்சி என்றும், புனல்தரு புணர்ச்சி என்றும், களிறுதரு புணர்ச்சி என்றும் புணர்ச்சி மூன்று விஷயமா யிருக்கும். பூத்தரு புணர்ச்சியாவது, அருங்கொம்பிலே பூவிருந்தால், அதைக் கண்டு எனக்குப் பறித்துத்தர வேணு மென்ன, நாயகன் தன்னைப் பேணாமல் பறித்துக்கொடுத்தால் அதுக்காக ஆலிங்கனம் பண்ணுகை. புனல்தரு புணர்ச்சியாவது, நீரிலேயமுந்துகையிலே

நாயகனுதவி யெடுத்தால் அதுக்குத் தோற்று, ஆபத்திலே ரக்ஷிப்பதே யென்றாலிங்கனம் பண்ணிக்கொள்ளுகை. களிறுதரு புணர்ச்சியாவது, மதயானை துரத்திக் கொண்டுவர, அதன் கையிலே யகப்படாதபடி தப்பிவித்தாவதற்குத் தோற்றாலிங்கனம் பண்ணிக்கொள்ளுகை.

பூதி – புழுதி
பூநெய் – தேன்
பூம் – அழகு, பொலிவு, பூவை
பூமகள் – பெரிய பிராட்டியார்
பூமகன் – பிரம்மா
பூரி – பொல்லாங்கு
பூரிக்கை – ஆஸ்ரயிக்கை
பூரியர் – பொல்லாங்கர்
பூவைக்கிட்டோம் – காமுகர், ஸ்திரீகளுக்கிட்டதைப் பூவைக்கிட்டோமென்ற சங்கேதச் சொல்.
பூனை – பூண்டு விசேஷம்

## பெ

பெண்கள்படும் – நீர்வாய்ப்பு
பெண்ணை – பனைமரம்
பெய்கை – இடுகை, சொடுக்கை, உண்டாக்குகை,அலங்கரிக்கை
பெய்துறவு – அஞ்சுகை
பெரியமுதலியார் – நாதமுனிகள்
பெருங்கடல் மண்டினாரைப்போலே – சமுத்ரங் கோத்தாப் போலே
பெருந்துறாய் – சம்சாரமாய்
பெருநிலை – பக்ஷபாதம்
பெருநீள் – பெருவளர்த்தி
பெரும்பாழ் – மூலப்பிரக்ருதி
பெருமக்கள் – பெரியோர், சுவாமி
பெற்பிறவி – விக்ரகம்
பெற்றம் – பசு, கன்று, பெருமை

## பே

பேகத்து – துக்கம்
பேணத்தகும் – ஆசைப்படத்தகும்
பேணல் – ஆசைப்படுதல், ஆதரித்தல்
பேதமை – அஞ்ஞானம்
பேது – ஒளிவரவு, பேதைத்தனம்
பேதுற்று – ஆசைப்பட்டு, கிலேசித்து, நெஞ்சழிவு, அஞ்சுகை, கலங்குகை
பேதறுகை – ஆசைப்படுகை, வைவர்ண்ய
பேதை – அறிவிலி, பருவம், குழந்தை, அறிவுக்கேடு
பேதைத்தனம் – அறிவின்மை, பருவம்,
பைங்கூழ் – பயிர்
பேராளன் – பெரியோன்
பேருகை – உலாவுகை, வளருகை

## பை

பை – அழகு
பைசல் – பிள்ளை
பைதல் – பாகம், பையல்
பைம் – பசுமை, குளிர்ச்சி, அழகு, விஸ்தாரம்
பைமை – அழகு, குளிர்ச்சி
பைய – மெல்ல, பொய்க்க

## பொ

பொங்கத்தம் – பொங்கு, சப்தானுகாரம்
பொங்குகை – மிகுதி
பொட்ட – பொட்டென
பொட்டு – வயிறு, பதரும்
பொடிகை – வைகை
பொடுக்கென – சட்டென
பொத்தல் – துளைத்தல்
பொதி – கட்டு
பொதுக்க – சடக்கென
பொதுநாயகம் – சர்வநிர்வாகம்
பொதும்பு – துளை, சாரம், குழி
பொதுளி – சமூகம், செறிவும்
பொந்து – வளை
பொய் – பிரக்ருதி
பொய்க்க – மெள்ள
பொய்மை – பொய்
பொருகை – செறிகை, யுத்தம் பண்ணுகை
பொருத்தம் – சாகம்
பொருத்தல் – தகிக்கல்
பொருதுதல் – நீங்குதல்
பொருந்துதல் – இசைதல், சேருதலும்
பொருநல் – திருத்தாம்ரபரணி
பொருப்பு – மலை, அழகும்
பொருவு – ஒப்பு, தடை, யுத்தம், செறிவு
பொருள் – உபாயம், அர்த்தம், சப்தம்
பொருள் வையதிகாரம் – அர்த்தார்ஜன பிரகாரம்
பொல்லல் – துளைத்தல்
பொலன் – பொன்
பொலிகை – மிகுதி, சம்ருத்தி
பொலிவு – அழகு
பொழிதல் – சொரிதல், வர்ஷிக்கை
பொழுது – சூரியன், காலம்
பொள்ளை – துளை
பொற்பு – அழகு, சமீபம், பலம்
பொற்றை – கற்பாறை, காடு, மலை
பொறாவாணை – வியர்த்தமானவாணை
பொறி – விதி, பொறியும், ஒப்பு, லாஞ்சனம், புள்ளி, அழகு, பெருச்சாளிப்பொறி
பொறிகை – எண்ணேற்கை
பொறை – பொறுமை, கிருபை
பொன் – அழகு, வைவர்ண்யம்
பொன்ற – நசிக்க
பொன்றி – சரீரம்
பொன்றிப்போகை – கள்ளராகப்போகுகை
பொன்றுவிக்கை – முடிக்கை

## போ

போக்கடி – பரிகாரம், உபாயம்
போக்கன் – உள்ளிலாதவன், வியர்த்தன்
போக்கி – ஒழிய
போக்குவிட்டு – போகவிட்டு
போக்குதல் – போகுதல்
போகப்பற்றி – போய்
போடக்கை – பண்ணறை, ஒரு காரியத்திற்கும் ஆகாதவன்
போத்துகை – வாங்குகை
போதகம் – யானை, குட்டி
போதர – மிகவும்
போதி – அரசமரம், அமணர்
போது – அலகுகை, மொட்டிக்கை, புட்பம், வேளை, சஞ்சரிக்கை, அலக்கை
போதுசெய்கை – மொட்டிக்கை, அலகுகை, காலம்
போந்து – பனை
போய்ப்பாடு – இடமுடைமை, வலி, புகழுடைமை
போர் – யுத்தம், ஆயுதம், நெல்லுப்போர்
போர்த்தல் – மூடுதல்
போர – அதிகமாக, உண்டாக
போருகை – போகை, வருகையும்
போருமாய்த்து – பூர்ணமாய்த்து
போலி – பிரகாரம்

போழ்க்கை – இரு துண்டமாக்குகை
போனகம் – திருப்போனகம்
பௌழியன் – ரிக்வேதி

### ம

மக்கள் – மனிதர்
மக்காணி – ஸ்தூல சரீரம்
மகன்றில் – அன்றில்பேதம்
மாகாவிருச்சம் – இலவமரம், கள்ளியும்
மங்குதல் – அருளுதல், துவளுதலும்
மங்குல் – மேகம், ஆகாசம்
மச்சம் – அடையாளம்
மச்சு – மேற்றளம்
மசக்குப்பரல் – மசக்கின் விதை, துலுங்கா விதை
மசுனாட்டலை – லஜ்ஜை
மஞ்சாட்டம் – விளையாட்டம்
மஞ்சாடி – கழஞ்சு, நிறுக்கும் எடைக்குப் பெயர்
மஞ்சியாக – சமூகமாக
மஞ்சு – அழகு, ஆபரணம், இளமை, மேகம், முகடு, யானை முதுகு
மஞ்ஞை – மயில்
மட்டிக்கை – மந்திக்கை
மட்டு – தேன்
மட – மடப்பம்
மடங்கல் – சிம்மம்
மடந்தை – யுவதி
மடப்பம் – சாபலம், பவ்யதை, அழகு, லஜ்ஜை, பற்றியது விடாமை
மடல் – தளம், பனையோலை
மடி – சோம்பல், புடைவை
மடுத்த – பிரவ்ருத்தமான
மடுத்துப்பிடிக்கை – கைமடக்குப்பிடிக்கை
மண்டுகை – விரும்புகை, தள்ளுதல்
மண்மகள் – பூமிப்பிராட்டி
மணக்குகை – உசப்பிக்கை
மணத்தல் – கலத்தல்
மணம் – செவ்வி, கல்யாணம், பரிமளம், இயற்கை, கைகோக்கை, விவாகம், விலக்கு
மணாட்டி – பெண்டாட்டி
மணி – அழகு, நிறம், விலக்ஷணம், பாறை, நீலமணி
மணிமாமை – அவயவ சோபை
மணியறை – மாணிக்கப்பாறை
மணியிலணி – மணியிலணி நிறமாய என்கிறவிடத்தில், மணியிலென்கிறது ஐந்தாம் வேற்றுமை, மணியில், மணியைக் காட்டிலும் என்று பஞ்சமீ வியக்தி, வேற்றுமை – விபக்தி
மத்தளம் – முழக்குவாத்யம்
மதப்பம் – பள்ளத்து வருகை
மதம் – கர்வம், களிப்பு
மதமத்தப்பூ – ஊமத்தம்பூ
மதலை – பிள்ளை, அழகு, இளமை, பிள்ளைத்தூண்
மதலைத்த – திரண்ட
மதவைத்தலை – பிள்ளைத் தூண்தலை
மதவு – பிள்ளை
மதி – சந்திரன், சந்திரசேகரன், அனுமதி, சத்ருசமாகை, ஞானம்
மதிசூடி – ருத்ரன்
மதிப்பன் – மதியை உடையவன்
மதிப்பு – மேன்மை, ஆதிக்யம்
மதியம் – சந்திரன்
மதுகரம் – வண்டு
மந்தாரம் – கற்பகப்பூ
மந்தி – பெண் குரங்கு
மந்திரம் – சர்வேஸ்வரன், ஏகாந்தம்
மந்திரித்து – ஆலோசனை பண்ணி
மயக்கம் – கலவி, கூடல்

மயக்கு – தெரியாச் செயல்
மயங்கல் – கூடல், கலவி
மயங்கி – மோகித்து, அறிவிழந்து
மயிரெறிகை – மயிர்க்கூச்சு
மயல் – இருள், பிச்சு, விஸ்மிருதி, பிராந்தி
மயவின்மை – மதிமயங்குப்பண்ணுகை
மருங்கு – சமீபம்
மருத்துவன் – வைத்தியன், ஆச்சாரியன்
மருத நிலம் – நதி தீரம்
மருப்பு – கொம்பு
மருபாடுருவ – பின்னே புறப்பட
மல்குதல் – மிகுதி
மல்லல் – ஆரவாரம், பெருமை, மிடுக்கு
மல்லு – மிடுக்கு, மல்லர்
மல்லை – மிடுக்கு, விஸ்தாரம்
மலக்கம் – கலக்கம்
மலிதல் – மிகுதி, கிளப்பம்
மலைக்கை – மலங்குகை
மலைமகள் – பார்வதி
மலையமான்கள் – தேச விசேஷத்தில் தலையாரிகள்
மலையாளர் வளைப்பு – மலையாளிகள் ஒருவன் கையிலே யொன்று வாங்க நினைத்தால், வாங்கியல்லாது போகார்கள்
மழலை – இளமை, பால்யம்
மழலைச்சொல் – பாலர் சொல்லும் வார்த்தை
மழறுகை – கலக்கம், அபிபவம்
மழு – பரசு
மழுவாளி – ருத்ரன்
மழை – ஆகாசம், மேகம், குளிர்ச்சி
மள்ளர் – வலையர், உழவர்
மறப்பு – விஸ்மிருதி
மறம் – கோபம், கொலை, கொடுமை, தறுகண்மை, அருளின்மை
மறி – குட்டி, இளமை, அலை
மறுக்குகை – மனந்திரிவைப்பண்ணுகை
மறுக்குதல் – கலக்குதல்
மறுகல் – கலக்கம், அஞ்ஞானம்
மறுநனைய – மறுபாடுருவ நனைய
மறுமுட்டுப்பொறாதபடி – பின்னையொரு காா்யத்திற்காகாதபடி
மறுமை – அதிட்டம், மேலும்
மன் – ராஜா, சுவாமி
மன்றல் – விவாகம்
மன்றில் – பொது நிலம்
மன்று – நாற்சந்தி, பொதுச்சாவடி, அம்பலம்
மனந்திரிவு – சம்சயம்
மஹிஷீசேவதம் – சம்சர்க்கம்
மனிச்சு – மானுஷயம்
மனைகை – உண்டாக்குகை
மா – மணம், பூஜ்யதை, பெருமை, அரி, சீதேவி, செல்வம், ஆடை, கருமை, வண்டு, நீட்சி, கறுப்பு, ஆனை, குதிரை, சிம்மம், மான், அழகு, நாலுகால் ஜந்துக்களுக்கெல்லாம் பெயர்.
மாக்கோல் – குதிரைக்கசை, தாற்றுக்கோலும்
மாகம் – பரமாகம்
மாசு – குற்றம்
மாட்சி – ஒளி, அழகும்
மாட்டுகை – எரியிடுகை, போக்குகை
மாட்டெறிந்தான் – நிச்சயித்தான்
மாடம் – கிருகம்
மாடாந்துகை – மழந்துகை
மாடு – தனம், சமீபம், பசு
மாண் – பெரியவளவு, பரபாகம், நன்மை, பிரம்மச்சாரி, அழகு
மாண்பு – ஸ்திரீத்வம், மிடுக்கு
மாணிக்கம் – பத்மராகம்

மாத்சரியம் – பிறர் மினுக்குப் பொறாமையை அனுட்டானபர்யந்த மாக்குகை

மாத்து – கொண்டாடப்படுகை, உடைத்தாகை

மாதவி – குருக்கத்தி

மாதிமை – மேன்மை

மாதிரம் – திக்கு

மாது – ஸ்திரீத்வம், அழகு, சிநேகம், பெண், மிடுக்கு

மாந்தர் – மனிதர்

மாந்துகை – புஜிக்கை, மயங்குகை

மாம்பழவுண்ணி – மாம்பழத்தோடு சம்பந்தமில்லாததொரு பூச்சி

மாமை – அழகு, தேககாந்தி, அவயவ சோபை

மாய்கை – முடிகை, நசிக்கை, துக்கப்படுகை

மாயம் – ஆச்சரியம், இச்சை

மாயவன் – ஆச்சர்யகுண சேட்டிதமுடையவன்

மாயன் – கரியன்

மார்மட்டு – அளவுபட்டு

மாரி – மேகம், வர்ஷாகாலம்

மால் – பிராந்தி, வியாமோகம், கறுப்பு, உயர்ச்சி, வேறொன்றை நினையாதிருக்கை, கலக்கம்

மாறுதல் – மயங்குதல்

மாறுகை – பிச்சேறுகை

மாலை – ராத்ரி, சந்தியாகாலம்

மாழை – சௌக்யம்

மாற்றம் – சொல், பிரத்யுத்தரம்

மாற்றோலைப்பட்டவர் – ஓலை மாறாடப்பெற்றவர்

மாறு – ஒப்பு

மாறுகை – பொருகை, சங்கிரமிக்கையும்

மான்மக்கள் – நத்தமக்கள்

மானம் – அளவு, பெருமை

மானாவிச்சோலை – மகாநவமிக்கு ராஜா கொலுவிருக்கிற வெளிகளிலே கமுகு, பலா, வாழை முதலான மரங்களை வெட்டிக் கொண்டுவந்து சோலை செய்வார்கள், அத்தைச் சொல்லுகிறது, சொக்கப்பனை

மானாவீ – மகாநவமி, அலங்காரம்

## மி

மிகுதி – தோற்றம், அழகு

மிகை – அதிகம், பாரமும்

மிடி – தாரித்ரியம்

மிடை – கிலேசம், கோபம்

மிடைகை – நெருங்குகை

மிடைந்த – நெருங்கின

மிண்டர் – மூர்க்கர்

மிதி – பூமி

மிலைக்கை – சங்கிரமித்துச் சப்திக்கை

மிழறுகை – அலமருகை, நிரம்பாமென்சொல்

மிளிர – ஒளிவிட

மிளிருகை – விகசிக்கை

மிளிறுகை – இடம் வலங் கொள்ளுகை

மிளை – சிறுதாறு

மிறுக்கு – துக்கம், வருத்தம்

மின்மினிபறக்கை – அனுபவத்தைக் கிரகிக்கப்போகாத படியிருக்கை

மினுங்குகை – பிரகாசிக்கை

## மீ

மீ – மேல், ஆச்சரியத்திலேயும்
மீசு – உச்சிட்டம்
மீசுண்ணி – உச்சிட்ட போகிகள்
மீண்டு – திரியிட்டு
மீதூர்ந்து – மேல்வந்து
மீமிசை – மிக்கது
மீமீது – மேலாகி, மேன்மையைச் சொல்கிறது
மீளை – தலையோடே
மீன் – நட்சத்திரம், மத்சயம்

## மு

முக்கியம் – வேண்டப்பாடு, அதிசயம்
முக்குகை – முழுக்குகை
முக்குணுக்கு – மூன்றுவளைதலா யிருக்குகை
முக்குவர் – முழுகும் பேர்
முக்கோட்டை – முந்தக்கவி பாடுவிக்குமாலயம், அதாவது, கவியலாதாரையும், கவி சொல்லவல்லராம்படி பண்ணிவைக்கும் கஜானன் இருக்குமிடம்
முகக்குகை – அனுபவிக்கை
முகடு – உச்சி, சிவரம்
முகந்துகொள்ளுகை – மண்டியனுபவிக்கை
முகப்பிலே – முன்னே
முகப்பு – முன்
முகபேதம் – ஆகாரவேதம்
முகில் – மேகம்
முகிழ்நகை – சுத்தியோகம், மந்தஸ்மிதம்
முகந்தன் – மோக்ஷப்ரதன்
முசுமுசுப்பு – சிரத்தை, இன்மை
முட்டாக்கிட்டுக்கிடக்க – ஏகாந்தம், ஸ்வாத்யானுபவம்
முட்டாணி – விலங்கிற்குத்தைக்கிற ஆணி
முட்டு – பொறுத்திருக்கை
முட்டுக்கோல் – கன்னக்கோல், குதிரை நடத்துகிறதாற்றுக்கோல்
முடி – மயிர்முடி, களை
முடியாமை – கிடையாமை
முடை – துர்க்கந்தம்
முண்டகம் – தாமரை
முண்டர் – சைவர்
முத்தக்காசு – கோரைக்கிழங்கு
முத்தம் – அதரம்
முத்தல் – மிடுக்கு
முத்து – ஆனந்தம், பிரீதி, அழகு
முத்துவமை – பூரணத்ருட்டாந்தம்
முதம் – சேட்டம்
முதல் – கைமுதல்
முதல்முன்னம் – பழையதாக
முதலி – பிரயாணன்
முதலியார் – அதிபதி, சிரேட்டன்
முதற்கொள்ள – அளவிட
முதறுகள் – பூதம்
முதன்மை – காரணத்வம்
முதுகிட்டான் – அம்பராத்தூணி
முதுமை – பெருமை, பழைமை, உயர்ச்சி
முந்தறமுன்னம் – பிரப்பிரதமம்
முந்தானை – மடி, தலைப்பு
முந்திரிகைப்பழம் – திராகைஷப்பழம்
முயங்க – கட்டிக்கொள்ள, நெருங்க
முயல் – அகங்காரமாகிற முயல், உத்சாகம், யத்தனம்
முயலுகை – உத்சாகிக்கை
முரசு – வாத்ய விசேஷம்
முரண் – மிடுக்கு, வக்கிரம்
முரி – பெருமை
முரிகை – வாய் மடிக்கை, முறிகையும்
முருக்கி – கொன்று

முருக்குகை – தேஜோபங்கம் பண்ணுகை
முருகு – தேன்
முருகை – கிளறுகை
முருட்டுடல் – திருடமானவுடல்
முருடுகொளுத்துகை – முருட்டுக்கட்டையிலே பற்றுகை
முல்லை – யாழ், குழல், முல்லையும்
முழஞ்சு – துளை
முழத்த – நிரம்பின
முழலை – வேங்கைப்புலி
முழவு – மத்தளம், வாத்தியம்
முழுகி – அவகாஹித்து
முழுசுகை – அவகாஹிக்கை, முகத்தாலே செய்யும் வியாபாரம்
முழை – துவாரம்
முளரி – சிறுசுள்ளி, தாமரை, முள்ளு
முளி – கொழுந்து, தளிர், உலர்ந்தது
முற்கோலி – மேலெண்ணி
முற்றம் – முடிதல், முற்றுமாய், வெளி
முற்றூட்டு – ஏகபோகம், எல்லாம்
முறி – தளிர், கண்டம்
முறிக்குக்கிழக்கு – கரைக்குக் கிழக்கு
முறியாழி – முரிந்த மோதிரம், வளை
முறுகல் – ஹேயம்
முறுடன் – பற்றி விடாதவன்
முறை – பர்யாயம், பிராப்தி, கர்ப்பவாசம், நரகம்
முறைமுறை – பர்யாயம் பர்யாயமாக
முறைமை – சம்பந்தம்
முன்றோன்றல் – தமையன்
முன்னிலை – மத்யம புருஷன்
முன்னிவந்து – முன்னே வந்து
முன்னோட்டுக் கொள்ளுகை – வருகிற காரியத்திற்கு முன்னேயா லோசிக்கை
முனவே – முன்னே
முனி – துறந்தவன்
முனிவர் – குணநிட்டர்
முனிவு – வெறுப்பு, பொடிகை
முனைத்த – மிக்க
முனையே – முன்னே
முனைவன் – பிரயாணன்

## மூ

மூக்குறிஞ்சுகை – முழுசுகை
மூக்கை – நசிக்கை
மூசுகை மொய்க்கை, விடாதேயிருக்கை
மூத்தபிள்ளை – செல்வப்பிள்ளை
மூது – பழைமை, காலங்கண்டவர்கள், அறிந்தவர்கள்
மூர்த்தி – சுவாமி, விக்கிரகம்
மூரி – பெருமை, வலி, இடம்
மூரிநிமிருகை – சோம்பல்முறிக்கை
மூரிநீர் – சஞ்சரிக்கிறநீர், சமுத்திரம்
மூரிமடிகை – முறிகை
மூவாமை – நசியாமை
மூழ்த்த – நிரம்பின
மூளை – அஸ்தி
மூன்றுதமிழ் – இயலிசைநாடகம்

## மெ

மெச்சு – மதிப்பு, சந்தோஷம்
மெய் – உடம்பு, சத்யம், சுபாவம், ஆத்மா
மெய்க்காட்டு – எண்ணிக்கை, கொடுக்கை
மெய்ப்பொருள் – ஆத்மா
மெய்ம்மை – மெய், முழுச்சொல்
மெய்யாகிறது – பகவத் விஷயம்
மெய்யாந்து – மயங்கி
மெலிகை – இளைக்கை, நைவும்
மெலிவு – நைவு, உடம்பிளைக்கை

## மே

மேகர் – ஜாகு, முன்னே நீநர் விடுகிறவர்கள்
மேகலை – வஸ்திரம், அரைநாண்மாலை

மேகுகை – பிரகாசிக்கை
மேத்து – சிரத்தை
மேதி – எருமை, நாடு
மேநாள் – பூர்வ நாள்
மேய் – பொருந்தி, கிட்டி,
ஆதரத்தைப்பண்ணி
மேய்கை – செய்கை, மேவுகை,
பொருந்துகை
மேல் – பண்டு, மேலையார், பூர்வீகர்கள்,
சிரேட்டாள், முன்னே
மேல்தோன்றி – விருக்ஷ விசேஷம்,
செங்காந்தள், ஆவாரை
மேலாப்பு – மேல்கட்டி
மேலிட்டு – மேல்விழுந்து
மேவுகை – பிராபித்தம்
மேற்பால் – மேலைத்திக்கு
மேன்மேலும் – உபர்யுபரி
மேன்மை – பெருமை
மேனாணிப்பு – கர்வம்

## மை

மை – இருள், கறுப்பு, மையும்
மைத்த – கறுத்த
மைந்தன் – மிடுக்கன், புத்திரன், ராஜா,
யௌவனம், வலி
மையல் – வியாமோகம், மயங்குகை,
அறிவுக்கேடு

## மொ

மொக்கல் – குமிழி
மொகடு – முதுகெலும்பு
மொய் – அழ்கு, செறிவு, பெருமை, வலி,
மிகுதி
மொய்த்தல் – தள்ளுதல்
மொய்ம்பில் – மிடுக்கு

## மோ

மோசுமோசுப்பு – சௌகுமர்யம்
மோடி – காடு, பிடாரி
மோடு – தோள், பெருமை
மோத – அடிக்க
மோபழம் – மேகற்பழம்
மோய் – மாதா
மோருகிற – ஆஸ்ராணிக்கிற
மோழை – கீழாறுநரகம்
மோறாந்து – தூறு மண்டின, திறந்த
மோஷகர் – திருடர்

## ய

யாழ் – கானம், தாமரை

## யோ

யோனி – ஜாதி, உற்பத்தி

## வ

வக்குரிக்க – வெடிக்க, வேகுகை
வக்கென்றிருக்கை – வேட்டையாயிருக்கை
வகர்த்தது – அப்பிராப்தமானது,
பிராப்தமானதும்
வகுக்கை – பிரிக்கை
வகுத்தது – கிடையாததும், கிடைத்ததும்,
வகுத்த ஞன்றுமாம்
வகுப்பு – கட்டளை
வகை – பிரகாரம், சுபாவம்
வங்கணம் – வம்சம், சிநேகம், சிநேகிதன்
வங்கம் – மரக்கலம், கப்பல்
வசிகை – வசீகரிக்கை
வசிசெய் – வசீகரிக்கை
வசுக்கள் – தேவதைகள்
வசை – தோஷம், முழுது, குற்றம்
வஞ்சம் – வஞ்சனை, பொய்

வஞ்சிக்கை – ஒன்றைச் சொல்லி ஒன்றைச் செய்கை
வடகு – லஜ்ஜை, சுவாபதேகத்தில் பக்தி
வடகுன்று – மகாமேரு
வடதிரிசொல் – ஆரியச்சிதைவு
வடம் – ஆலமரம், தழைத்தல், தொடை
வடமொழி – சம்ஸ்கிருதம்
வடி – கூர்மை, அழகு
வடிம்பிட்டு – காலாலே குத்தி, குத்தி
வடிவு – சுபாவம், அழகு, வற்றுதல்
வடு – அவத்யம்
வடுகர்விடு நகம் – வடுகர் கையில் கூர்கிட்டிக்கோல்
வண்டலிடுகை – வண்டல்படிகை
வண்டானம் – நீர்க்கோழி
வண்டு – நாயகன்
வண்ணக்கா – அழகியதாக, சிரேட்டமாக
வண்ணம் – சுபாவம், நிறம், தொனி, அழகு, பிரகாரம், பிரகாசம்
வண்மை – சுபாவம், அழகு, சம்பத்து, உதாரம், குளிர்ச்சி
வது – மது, மணம், கல்யாணம்
வதுவை – கல்யாணம், பரிமளம்
வந்தி – வளை
வந்திக்கை – ஸ்தோத்திரம் பண்ணுகை, கோபிக்கை
வப்புத்தட்டுகை – கர்வத்தினாலே தொடைதட்டுகை, தோளிலே தட்டுகையென்றுமாம்
வம்பு – அபூர்வம்
வயிறுதாரி – பகுபுக்தி
வயிறுவாய்க்கை – கர்ப்பமாகை
வர்ணசிரமஹ – அக்ஷர சிக்ஷை
வரம் – பலம்
வரம்பு – அணை, தடை, அவதி
வரலாறு – ஹேது
வரி – ரேகை, தர்சனியம், அழகு, கீற்று
வரிசை – ஆதிக்யம்
வரிந்து – கட்டி
வதிநிழல் – நிழல், வெய்யில்

வருட – தொடை குத்த
வருத்தம் – யத்தனம், துக்கம், மனக்கிலேசம்
வரைந்துகொண்டு – வரித்துக்கொண்டு
வரையிட்டுக்காட்டுகை – ஆறுபெருகுகிற போது மேன் மேலும் அடையாளமிட்டுக் காட்டுகை
வலம் – துணிவு, பலம்
வலிக்கை – இழுக்கை
வலிய – திருடம்
வலை – தேகம்
வவ்வுகை – உண்கை, வாங்குகை, கவ்வுகை, சுவீகரிக்கை
வழி – வாசல், நடு, ஒழுங்கு, பிராப்யம், மார்க்கம்
வழிப்பட்ட – வழிவிட
வழிப்படுகை – ஆஸ்ரயிக்கை
வழியட்டுகை – வழியவிடுகை
வழியடிப்பார் – வழிபறிக்கிறபேர்
வள்ளி – வல்லி
வள்ளுகிர் – கூர்மையுடைய நகம், வளைவையுடையதும்
வளவன் – சோழன்
வளாய் – அளவளாவி, சுற்றி
வளை – கைவளை, பாழி
வளைதல் – போக்கறுதல், போக்கறுதி
வளைப்படுகை – ஆணையிட்டுத் தகைந்துகொள்ளுகை
வளைப்பு – மறிப்பு
வளைப்புக் கிடக்க – மறிக்க
வறமுறுகல் – வறுக்கச்செய்தே கருகிப்போகை
வறுநாற்றம் – வறுத்த திரவ்ய நாற்றம்
வன்சேறு – வட்டிச்சேறு
வன்மை – மிடுக்கு, அழகு, ஔதார்யம்
வன்னம் – பிராமணாதி வர்ணம், நிறம், சுபாவம்
வன்னியப் பற்று – பாளையப்பட்டு, பாளையகாரர்
வன்னியம் – குறும்பு, பிரதிஹதி

வனப்பு – நானாவர்ணம்
வனம் – அழகு, உபகாரம், சம்பத்து, கட்டளைப்பாடு, சஞ்சரிக்கை
வனைதல் – செய்தல்
வஸி டமாக – சிரே டமாக, அழகியதாக

## வா

வாங்குதல் – வளைதல், வலித்தல்
வாசம் – வாசனை, குளிர்ச்சியும்
வாசி – அதிசயம், குதிரை, வாஜி
வாட்டம் – சங்கோசம்
வாட்தீயீடாக – தீக்ஷணமாக
வாட – நசிக்க
வாணன் – பாணாசுரன், மகாபலி, நிர்வாஹகன்
வாணாள் – ஆயுசு, வாழ்கிற காலமும்
வாணிபம் – வியாபாரம்
வாநிறம் – வெளுத்த நிறம்
வாய் – வாய்ப்பு, ஸ்வரம், இடம்
வாய்க்கை – கிட்டுகை
வாய்கரை – மேலெழ, கதியின்மை
வாய்த்தலை – மூலம்
வாய்புகு சோறு – வாயிற்சோறு
வாய்புகு நீர் – ஜீவனம்
வாய்மை – மெய், வாக்மிதை
வாய்வாய் – சுபோலதாடனம்
வாய்விடாச்சாதி – வார்த்தைசொல்ல அறியாதவன்
வாயாடி – சங்கல்பித்து
வாயுறை – அருகம்புல்
வாயோலை – நெல்லுக்குழிக்குப் போடுகிற சீட்டு
வார் – சூழ்ச்சி, வாராநிற்கை, ஜலம், பூர்ணம், நீட்சி, முலைக்கச்சு, நெடுமை
வார்தல் – எழுகுதல், போதல், நெடுமை
வாரம் – பங்குமுறை, வட்டக்கடை, வட்டமாகச்சொல்லுகிறகடை
வாரி – சமுத்திரம்
வாரிப்பிடியாகப் பிடிக்க – ஒருக்காலே பிடிக்க
வாருகை – அதிகமாகை
வால் – வலியது
வாலியது – வலியது
வாள் – காந்தி, அழகு, மிடுக்கு
வாளேறு காணத் தேளேறுமாப்போலே – அதிக துக்கத்தைக் கண்டால் அல்ப துக்கம் போம். வாளேறு – கத்தி வெட்டுப் பயம், தேளேறு – தேள் கொட்டின உபத்திரவம்
வான் – பெருமை, ஆகாசம், மேகம், வலி, அதிசயம்
வானம் – ஆகாசம், மேகம்
வானுவம் – பிரயோஜனம்

## வி

விசை – வேகம்
விசைக்கொம்பு – வலித்துவிட்ட கொம்பு
விசைப்பு – அதிசயம்
விஞ்சைவானவர் – வித்யாதரர்
விடுகாது – தோடுவாங்கின காது
விரகர் – சமர்த்தர்
விரகு – உபாயம்
விருவுகை – பரம்புகை
விலங்கல் – மலை
விலங்கு – மான், குரங்கு முதலானவை
விழுது – வெண்ணெய்
விளரி – ஒரு பண், சேறு
விளாக்குலை கொள்ள – கரை புரள
விளி – கூப்பிடுகை
வினை – பாபம்
வினைக்கேடு – காரியக்கேடு
வினையெச்சம் – கிரியா சங்கோசம்

## வீ

வீடு – விடுகை, கிருகம், மோக்ஷம்
வீரக்கழல் – விருதுக்கழல்
வீவு – நாசம்
வீழ் – விழ, மேல்விழவென்றுமாம்
வீழ்ந்திடங்கிடக்கை – அப்பிரசித்தை
வீறு – அதிசயம், கர்வம்,

## வெ

வெகுண்டு – கோபித்து
வெஞ்சமம் – யுத்தம்
வெப்பம் – துக்கம்
வெப்பி – பயமுறுத்தி
வெருட்டி – மிரட்டி
வெல் – வெல்லுகை, ஜெயிக்கை
வெளிச்சிறப்பு – வைசவ்யம்
வெற்றி – ஜெயம்
வெறுப்பு – கோபம்

## வே

வேட்கை – ஆசை
வேட்டபொழுது – வேண்டினபொழுது
வேண்டப்பாடு – பெருமை
வேதகப்பொன் – தன்னைப்போலே
பண்ணும் பொன்
வேரி – பரிமளம்
வேல் – வெல்லுகை, ஜெயிக்கை
வேற்று – வேவுபார்த்து
வேனல் – கிரணம்

## வை

வை – கூர்மை
வைகல் – நாள்தோறும்
வைப்பு – நிக்ஷேபம், தனம்

**தமிழ் அகராதி முற்றும்**

